# ஏர் எழுபது

## திருக்கை வழக்கம்





**சி. காராளசிங்கம்**

# ஏர் எழுபது-
# திருக்கை வழக்கம்



பதிப்பாசிரியர் :

சி. காராளசிங்கம்

விற்பனை உரிமை :




ஐந்திணைப் பதிப்பகம்
தொலைபேசி : 849410
279, பைகிராப்ட்ஸ் (பாரதி) சாலை
திருவல்லிக்கேணி
சென்னை-600 005

முதற் பதிப்பு : மார்ச்சு, 1990



மலேசியா டாலர் பத்து - 10
சிங்கப்பூர் டாலர் ஐந்து - 5

விலை ரூ. 15-00

YER ELUPATHUM THIRUKKAI
VALAKKAMUM

Poems, Prose & Translation

By. C. KARALASINGAM
First Edition, March 1990
152 + 16 = 168 Pages
10 Pt. Letters
SAALAI ACHAHAM
Madras-600 086

(இந்நூலில் இடம்பெறும் 'திருக்கை வழக்கம்' உரை
பகுதி, திரு. வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியா
உரையைத் தழுவியது.)

பிரதிகள் கிடைக்கும் இடங்கள் :

1. சி. காராளசிங்கம்
12-டி, காரணீஸ்வரர் பகோடா சாலை
மயிலாப்பூர், சென்னை - 4

2. காந்தளகம்,
4, முதல் மாடி, ரகிசா கட்டிடம்,
834, அண்ணா சாலை, சென்னை - 600 002

படையல்

அனைத்து உலக
உழவர் பெருமக்களுக்கு

—சி. காராளசிங்கம்
18-3-90



கம்பரும் அவர் மனைவியும்

[தேரழுந்தூர் திரு ஆமருவியப்பன் ஆலயத்தில் உள்ள பழைய சிலைகள்]

# அணிந்துரை

டாக்டர் தமிழண்ணல்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

கம்பர் பாடியனவாகக் கூறப்படும் நூல்களுள் 'ஏரெழுபதும்' ஒன்று; 'திருக்கை வழக்கம்' என்பது பிறிதொன்று. இவை இரண்டும் வேளாளர்தம் சிறப்பையும் உழுதொழிலின் மாண்பையும் பழைய சங்க இலக்கியம், திருக்குறளின் மரபுவழியில் பாராட்டிப் புனையும் பனுவல்களாகும்.

யாழ்ப்பாணம் சி. காராளசிங்கம் அவர்கள் வேளாண் துறையில் பணியாற்றி ஒய்வுபெற்ற ஓர் உயர் அதிகாரி ஆவார். அங்கு அவர் ''விவசாய விஸ்தரிப்பு அதிபர்'' ஆக விளங்கியவர். தாம் பிறந்த குடிச்சிறப்பாலும் தம் அரசுப் பணியாலும் அவருக்கு வேளாண்துறையில் ஒரு பிடிப்பும் ஆர்வமும் ஏற்பட்டதில் வியப்பில்லை. அவர்தம் பெயர் தானும் அவரைக் காராளர்க்கு அவரொரு சிங்கம் என்று தானே அறிமுகப்படுத்துகிறது.

ஏரெழுபது, ஏரின் சிறப்பைப் போற்றிப் புகழ்கிறது. ஏர்த்தொழில் பற்றிய நுட்பமான செய்திகள் விரித்துரைக்கப்படுகின்றன. அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் எனச் சுட்டுவதே தமிழ்நூன்மரபு. இஃது பிராமண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திர எனப்பட்ட

வருணாசிரம முறையினின்றும் வேறுபட்டது. தமிழர் வகுப்பு தொழிலின்பாற்பட்டது; வடவர் பகுப்பு பிறப்பின் பாற்பட்டது. ஏனைய குலத்தவர் யாவரும் வேளாளர் கையை எதிர்பார்த்திருத்தலால் அவர் கை 'திருக்கை' என்றும், அவர் தொழில் 'திருக்கை வழக்கம்' என்றும் சிறப்பிக்கப்பட்டன. அவர்கள் போற்றும் ஏரும் — ஏர்த் தொழிலும் முடி மன்னருக்கும் அருமறை அந்தணருக்கும் மன்னர் பின்னோராம் வணிகருக்கும் உதவவல்ல உயர் வுடையது என்பதே 'ஏரெழுபது' நூல் முழுவதும் பேசப்படு கிறது.

கார் நடக்கும் படிநடக்கும் காராளர் தம்முடைய
ஏர்நடக்கும் எனில் புகழ்சால் இயலிசை நாடகம் நடக்கும்
சீர்நடக்குந் திறம்நடக்கும் திருவறத்தின் செயல்நடக்கும்
பார் நடக்கும் படைநடக்கும், பசிநடக்க
மாட்டாதே! (19)

ஏரெழுபதின் இப்பாடல் காராளர்தம் தொழில் சிறப்பை மிக இனிதாக எடுத்தோதுகிறது. இதற்குக் காராளசிங்கம் அவர்கள் உரை எழுதி, ஆங்கில மொழி பெயர்ப்பும் தந்துள்ளமை மிகப் பொருத்தமாகும். ஏரெழு பதில் பாயிரமாக ஒன்பது பாடல்கள் உள்ளன; பிறகு எழுபது பாடல்கள் நூலின் உள்ளடக்கமாக உள்ளன.

சோழநாட்டில் 79 நாடுகளாகப் பகுக்கப்பட்டு, 79 குடிகள் சோழமன்னன்கீழ் வாழ்ந்ததாகவரும் 'ஏரெழுபது'க் குறிப்புக்கும் 79 பாடல்கள் இந்நூலில் இருப்பதற்கும் பெரும் இயைபு காணப்படுவது சிந்திக்கத்தக்கதாகும். "எழுபத்தொன்பது நாட்டுக் குடியுடையான் சென்னி" (பாயிரம் : 5) என்ற ஏரெழுபது வாசகம் காண்க.

ஏர் என்ற கருவியின் உறுப்புக்கள் நிரலே சிறப்பிக்கப் படுதலால், இந்நூலாசிரியனுக்கு உழவுகருவிகளின் நுட்பம் தெரிந்திருந்தமை போதரும். அலப்படை, மேழி, ஊற்

றாணி, நுகத்தடி, நுகத்துளை, நுகத்தாணி, பூட்டாங் கயிறு, தொடை, கொழு, கொழுவாணி, தாற்றுக் கோல், உழவெருது, எருதின் சுவல் தழும்பு, பகடுபூட்டல், ஏர்பூட் டல், ஏர் நடத்தல் ஒவ்வொன்றும் பாதாதி கேச வருணனை போல நிரலே சொல்லப்பட்டு வருகின்றமை மனங்கொளத் தக்கதாகும். மேற்கூறிய கருவிகளின் பாகங்களையும் படம் போட்டு விளக்கலாம்போல் தோன்றுகிறது. அங்ஙனம் இவை ஏரெழுபதில் சித்திரிக்கப்படுகின்றன.

உழவுத் தொழிலும்கூட நிரல்படக் கூறப்படுகிறது படைச்சால், களைக் கொட்டு, வரம்புகோலுதல் (வரப்பு), எருக்கூடை, சேறு செய்தல், பரம்படித்தல், வித்துவிளைத் தல், பயிர் முளை, நாற்றங்கால், நாறுபறித்தல், முடிசேர்த் தல், முடி விளம்பல், கைப்பாங்கு, நடவுமுனை, பைங்கூழ் காத்தல், கண்டுமுதல், பயிர்வளர்தல், ஏற்றம், துளைநீர், கரம்பு திருத்தல், புழுதி, பைங்கூழ் நடல், நீர்பாய்ச்சல். களை களைதல், கருப்பிடித்தல், ஈற்றேறல், அரிகதிர், அரிசூடு, களம், அரிமிதிகோல், போர் செய்தல், போர்க் களம் பாடுதல், பொலிகுவித்தல் என இவ்வாறு வருவன பலவும் கமத்தொழில்சார் கலைச்சொற்களாகும். இவை நுட்பமாய் ஆராயப்படின், தமிழர்களின் வேளாண் நாகரிகம் இனிதுணரப்பட்டு உலகிற்கு உணர்த்தப்படும்.

உழவரே முதற்கண் போர்க்களம் அமைத்துப் பொலி தூற்றிப் பாட்டிசைத்துப் பரவுமாறு பணிசெய்தனர். இங்கு 'போர்'—என்பது போராகக் குவிக்கப்படும் நெல்மணிகளின் குவியலையும் வைக்கோல் போரினையும் குறிக்கின்றது. மன்னர் செய்யும் போருக்கும் முற்பட்டதென்பதுடன், இச்சொல்லாட்சிகளை எல்லாம் முடிசார்ந்த மன்னர்களும். வேளாளரிடமிருந்தே பெற்றனர் என எண்ண இடம் தருகிறது.

கண்டுமுதல் என்ற சொல், விளைவை அறுத்துப் பொலிதூற்றி, சாவிபதர் குப்பைகளை அகற்றித் தொகுத்த நெல்மணிகளைக் குறிக்கிறது. அக் கண்டுமுதலே மீண்டும் விதைநெல்லாக வளம்பெருக்க உதவுதலால், அந் நெல் மணிக்குவியலை உழவுத் தொழிலின் பயனாய்க் கிடைத்த நிகர லாபம் என்ற அடிப்படையில் 'கண்டுமுதல்' என்றனர். இன்று வாணிகம் செய்வார், வாணிகத்தின் பயனாகக் கிடைக்கும் இலாபத்தையும் முன்போட்ட முதலுடன் சேர்த்து, மீண்டும் அடிப்படை முதலாகக் கொள்ளும்போது 'கண்டுமுதல்' என்பது, அவ்வணிகர்கள் இச்சொல்லைக் கூட, வேளாளரிடமிருந்தே கடன்பெற்றனர் எனக் காட்டு கிறது.

'கல்லறை' என்ற சொல்லாட்சிகூட நம்மைத் திகைக்க வைக்கிறது. "களம் துவைக்க வை உகுத்த கல்லறைகள்" என்று தானியங்கள் தொகுத்து வைக்கப்பட்ட அறைகள் சிறப்பிக்கப்படுகின்றன. பெரும் பெரும் குதிர்களாக மண்ணால் செய்வதுண்டு. கல்லாலும் அவை அமைக்கப் பட்டு நெல்மணிகள் காக்கப்பட்டுள்ளன. மனிதர்களுக்குக் 'கல்லறை' கட்டியவர்களும், இந்நினைவோடு கட்டினார் கள் போலும்!

இவை எல்லாம் வெறும் சொல்லாட்சிகள்தானே என்று கருதுவதற்குரியன அல்ல. முல்லைநில ஆயர்குல நாகரிகமும், மருதநில வேளாளர் குல வேளாண் நாகரிகமும் ஏனைய தொழில், கலை, வாணிகத் துறைகளனைத்திலும் தம் செல்வாக்கைப் பரப்பின என்பதற்கு இவைகள் அடை யாளங்களாகும். ஏரெழுபதை எழுதியவர் யாராக இருந் தாலும், அவர் வேளாண் தொழிலின் திட்ப நுட்பங்களை நன்குணர்ந்தவர் என்பது தெளிவு.

திருக்குறளில் வரும் உழவு அதிகாரத்தையும், ஏரெழுப தையும் ஒப்பிடுபவர்கள், அவ்வதிகாரத்தின் விரிவுரையே

ஏரெழுபது என உணர்வர். இதனை, இந் நூலுரையாசிரியர் திருவாளர் சி. காராளசிங்கம் அவர்கள் தம் தெளிந்த நீரோடைபோலும் தெளிவுரையில் நன்கு விளக்கியுள்ளார்.

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாம்
தொழுதுண்டு பின்செல்பவர் *(1033)*

என்ற திருக்குறட் கருத்தை, ஔவையார் பிறிதொரு வகையாகக் கூறுவர்.

ஆற்றங் கரையின் மரமும், அரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே—ஏற்றம்
உழுதுண்டு வாழ்வதற்கு ஒப்பில்லை கண்டீர்
பழுதுண்டுவேறோர் பணிக்கு (நல்வழி : 13)

இந்த நாகரிகம் சங்ககாலம் முதற்கொண்டு இங்கு கால்கொண்டிருந்ததாகும். ''பொருபடை தருஉம் கொற்றமும், உழுபடை ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே'' (புறம் 35) என்ற வெள்ளைக்குடி நாகனார் பாட்டு இதை வலியுறுத்தக் காணலாம்.

மேதகு காராளசிங்கம் அவர்கள் தந்துள்ள ஆங்கில மொழி பெயர்ப்பும் கருத்திற்கொள்ளத் தக்கதாகும். தமிழர் நாகரிகச் சிறப்புகள், நடுநிலையுடன், உலகமன்றங்களில் எடுத்துவைக்கப் பெறவேண்டும். 'மறைவாக நமக்குள்ளே பழங் கதைகள்' பேசுவது ஒயவேண்டும். இத்துறையில் தம் ஆர்வமேலீட்டால், அகவை முதிர்ந்தபோதும் அயராமல், ஈடுபட்டு உரை எழுதியும் ஆங்கில ஆக்கம் செய்தும் தம் புலமைச் சிறப்பை வெளிப்படுத்தியுள்ள வேளாண் துறை வளர்ச்சித் திட்ட அதிபராக, இலங்கை அரசில் பணியாற்றிய காராளசிங்கம் அவர்களைத் தமிழ்கூறும் நல்லுலகமனைத்தும் பாராட்டக் கடமைப்பட்டுள்ளது.

'ஏரகம்'
சதாசிவநகர்
மதுரை-625 020

தமிழண்ணல்

# நயப்புரை

பேராசிரியர் முனைவர் கா. பொ. இரத்தினம்
(பாராளுமன்ற முன்னாள் உறுப்பினர், இலங்கை)

பெரியார் திரு. காராளசிங்கம் அவர்கள் வேளாண்மைத் தொழிலை வளப்படுத்துவதைத் தம் குறிக்கோளாகக் கொண்டு அயராது உழைத்து வந்த ஒரு பெருந் தொண்டராவார்; இலங்கை அரசின் கமத் தொழில் திணைக் களத்தில் பல்லாண்டு பணியாற்றி உயர் பதவியிலிருந்து ஓய்வு பெற்றவர். இலங்கையில், அரசு அலுவலராயிருந்த காலத்தில் இலங்கையின் பல பகுதிகளுக்குச் செல்லும் வாய்ப்பும், அவ்வப் பகுதியிலுள்ள பயிர் வகைகளை ஆராயும் வாய்ப்பும், உழவுத் தொழிலில் ஈடுபட்டவர்களோடு கலந்து பழகி அவர்களை ஊக்கும் வாய்ப்பும் பெற்றவர்.

அவர் உழுதொழிலின் உயர்விலும் பெருமையிலும், அதன் உயிர் கொடுக்கும் ஆற்றலிலும் தம் உள்ளத்தைப் பறிகொடுத்தவர். இன்றும் அவருடைய எண்ணம், சொல், செயல் யாவும் உழவுத் தொழிலையே மையமாகக் கொண்டுள்ளன. இவ்வாறு ஒரு தொழிலோடு இரண்டறக் கலந்து உழைக்கும் தனிச் சிறப்புடையவர்களை இக்காலத்திற் காண்பதரிது.

இத்தகையவருக்கு "ஏர் எழுபதில்" உண்டான ஈடுபாடு எல்லையற்றது. இன்று வரை அவர் ஏரெழுபதி லுள்ள பாட்டுக்களை எடுத்துரைத்து விளக்கி வரு கிறார். எவரோடு உரையாடினாலும், அந்த உரையாட லில் இந்தப் பாடல்களில் ஒன்றையாவது அவர் புகுத்தா மல் விடுவதில்லை. சுருங்கக் கூறின், ஏரெழுபதின் பாடல் கள் அவருடைய ஊனோடும் உயிரோடும் கலந்துவிட்டன எனலாம்!

இத்தகைய ஈடுபாட்டினால் ஏரெழுபதை ஆங்கில மொழி பெயர்ப்புடன் பதித்து வெளியிடுதற்குப் பல ஆண்டுகளாக முயன்று வந்தார். எண்பதாவது அகவை யைக் கடந்த பின்னரும், அவர் ஓடியாடி அயராமல் உழைத்தமை பாராட்டுக்குரியது, வியப்புக்குரியது.

அவருடைய அரும் பெரும் முயற்சியின் பயனாக இப்பொழுது ஏரெழுபதும் அதனுடைய மொழி பெயர்ப் பும் நூலுரு வெய்தியுள. இதனுடன் சேர்த்து வேளாளர் கையின் — கொடையின் — தியாகத்தின் சிறப்பினைக் கூறும் "திருக்கை வழக்கம்" எனும் நூலினையும் உரை யுடனும் ஆங்கில மொழி பெயர்ப்புடனும் பதிப்பித்துப் பெருந் தொண்டாற்றியுளர்.

இந்நூற்படிகளைப் பெறுதற்கும், ஆங்கிலத்தில் மொழி பெயர்ப்பித்தற்கும், அச்சிட்டு வெளியிடுதற்கும் அவர் செய்த அரும் பெரும் முயற்சிகள், தமிழ்ப் பேரறிஞர் முது முனைவர் உ. வே. சாமிநாதையர் சில

ஏடுகளைப் பெறுதற்கு மேற்கொண்ட முயற்சிகளை நினைவூட்டத்தக்கன.

அவருடைய பல்லாண்டு முயற்சி நன்கு நிறைவேறி ஏர் எழுபதும் திருக்கை வழக்கமும் வெளியிடப்படுவது மகிழ்ச்சிக்குரியது. அவருடைய தொண்டு வாழ்க!

**கா. பொ. இரத்தினம்**

# மகிழ்வு உரை

பேராசிரியர் சாலை இளந்திரையன்

பெரியவர் காராளசிங்கம் அவர்களைச் சந்திப்பதற்கு முன்பே அவரைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்தேன்; அவர் ஓர் அரசு அலுவலராக இருந்து ஒய்வு பெற்றவர் என்று கேள்விப்பட்டிருந்தேன்... அரசு அலுவலர் என்றாலே எனக்கு ஒருவகையான வெறுப்பு. சில புலவர்கள் அரைத்த மாவையே அரைப்பது போல, அரசு அதிகாரிகளும் நமக்கு விருப்பமில்லாத, நமக்குத் தேவையே இல்லாத தங்கள் 'வீரப்ரதாபங்களையே' பன்னிப் பன்னிப் பேசிக் கொண்டு இருப்பார்கள். அதனால், கூடியவரை நான் அரசு அலுவலர் களைச் சந்திப்பதைத் தவிர்ப்பது வழக்கம்...திடீரென்று ஒருநாள் திரு. காராளசிங்கம் அவர்கள் எங்கள் வீடு தேடி வந்தார்; அவர் யார் என்று நாங்கள் அடையாளம் தெரிந்து கொள்வதற்கு முன்பே பேசத் தொடங்கிவிட்டார். அவருடைய பேச்சு இலக்கியத்தைப் பற்றியதாகவும், அபூர்வமான செடி கொடி இனங்களைப் பற்றியதாகவும், பயிர்த்தொழில் பற்றியதாகவும் இருந்தது. பேச்சின் இடையே அவர்தான் காராளசிங்கம் என்று அறிய நேர்ந்த போது, 'இவரா அந்த அரசு அதிகாரி!' என்று வியப்படைந் தேன்.

இந்தப் பெரியவர், கம்பர் படைத்ததாகக் கருதப்பட்டு வரும் ஏரெழுபது, திருக்கை வழக்கம் என்னும் நூல்களைப் பதிப்பிக்க முன்வந்ததில் வியப்பு ஏதும் இல்லை. உழுதொழி லுக்கு உரிய பெருமக்களைப் பற்றிய இந்தச் சிந்தனைகள் தமிழ் எல்லை தாண்டி வெளியே பரவவேண்டும் என்று அவர் விரும்பியதும் அதற்கான முயற்சியில் அவர் ஈடுபட்டதும் அவருடைய ஆர்வப் பெருக்குக்கு ஒத்ததான சிறந்த நிகழ்ச்சிகளே. இந்த நூல்களுக்கு அவர் அளித்துள்ள விளக்கங்களும் ஆங்கில மொழியாக்கமும் இந்தச் சிற்றேடு

களின் மதிப்பை உயர்த்தியிருக்கின்றன என்பதிலும் யாதோர் அய்யமுமில்லை.

வயது முதிர்ந்த நிலையிலும் நல்ல இளநீர்களைத் தருவது உயர்ந்த சாதித் தென்னைமரம்; மிக முதிர்ந்த பருவத்திலும் நல்ல கனிகளைத் தருவது தரமான மாமரம். அதுபோலவே, ஒரு மனிதர் நல்லவர் என்றால், எந்தப் பருவத்திலும் அவர் நல்ல செயல்களில் ஈடுபட வேண்டும்! கூடியவரை, பணநினைவும் பதவி நினைவும் இல்லாதவராகப், பொதுவான உயர் சிந்தனைகளில் அவருடைய உள்ளம் தோய்ந்து கிடக்க வேண்டும். இந்த இலக்கணத்தின் படி இனிய தென்னையாகவும் கனிந்த மாவாகவும் சிறந்த மனிதராகவும் விளங்குகிறார் முதியவர் காராளசிங்கம் அவர்கள். இத்தகைய ஒருவரை, அல்லது இவர் போன்ற சில பேரைச் சந்தித்து மகிழ்ந்த ஒருவர்தான், 'நல்லாரைக் காண்பதுவும் நன்றே' என்று பாடி உள்ளம் நெகிழ்ந்திருக்க வேண்டும். எண்பது வயதைத் தாண்டிய இந்த இளைஞர் ஆர்வம் குன்றாத அறிஞராகவும் நல்ல சிந்தனைகளில் நாட்டம் மிக்க பெரியவராகவும் விளங்குவதைப் பார்க்கின்ற இளையவர்கள் புதியதொரு தெம்பும் செயல் ஊக்கமும் பெறுவார்கள் என்பது திண்ணம். அவரை நேரில் பார்க்க முடியாதவர்களுக்கும், அவர் இந்த வயதில் பதிப்பித்து வெளியிடும் இந்தப் புத்தகம் அந்த உணர்வுகளை உண்டாக்கும் என்பது திண்ணம். இவ்வளவு உறுதியாக நான் சொல்லுவதற்குக் காரணம், காராளசிங்கத்தாரின் சந்திப்பு எனக்கு இந்தச் செல்வங்களை வாரித் தந்திருக்கிறது!

உழவர்களின் பெருமையில் உள்ளத்தைப் பறிகொடுத்த இந்த இலக்கியச் செல்வரின் இதய நலம் இளையோர்க்கு வழிகாட்டியாக விளங்குவதாக! அவருடைய தளராத முயற்சி தமிழ்மக்களின் நெஞ்சங்களில் நின்று நிலைப்பதாக!

★★

# ஏர் எழுபது-
# திருக்கை வழக்கம்

உரை விளக்கம்
ஆங்கில ஆக்கம் :
**சி. காராளசிங்கம்**

ஏர் எழுபது—திருக்கை வழக்கம் அருளிய

# கம்பர் வரலாறு

தமிழில் உள்ள மிகப் பெரிய காவியங்களுள் இராமாயணமே முதன்மையானதாகும். இராமாயணத்தை விட கம்பர் எழுதிய நூல்கள் ஒன்பதனுள் "ஏர் எழுபதும் திருக்கை வழக்கமும்" தமிழ் மக்களது பொருளாதாரத்தைப் புகழ்ந்துரைப்பதும், வேளாண் மரபுக்கு உறுதுணையாக ஊக்கமளிக்கும் நோக்கத்தைக் கொண்டதுமாகும். வேளாளர்களின் மகிமையை. உலகுக்கு எடுத்துக்காட்டும் தனிப்பெருமை வாய்ந்த படைப்பாகும். ஆகையால் இந்தப் பெரிய நூலை ஆக்கியவரின் வாழ்க்கை வரலாற்றை அறிய வேண்டியதும் அவரின் படைப்புகளுக்குக் காரிய காரணமாயுள்ளவற்றை அறியவேண்டியதும் அவசியமாகும்,

இவர் சோழமண்டலத்தில் இரண்டாம் குலோத்துங்க சோழன் அரசாண்ட காலத்தில் "திருவழுந்தூர்" என்னும் கிராமத்தில் உவச்சர் மரபில் ஆதித்தர் என்பவருக்குப் புத்திரனாக உதித்தார். மரபுச் சமயம் வைணவம் ஆகும். இவரை ஆதரித்தவர் சடையப்பவள்ளல் என்னும் பெயரைக் கொண்ட பெருமகனாகும். இவருடைய காலம் கி. பி. 12 ஆம் நூற்றாண்டு என்றும், 9 ஆம் நூற்றாண்டு என்றும் கூறுவர். இன்றைய இளைஞர்கள் அறிய வேண்டிய நோக்கத்தையிட்டு கம்பரால் படைக்கப்பட்ட வேறு நூல்களையும் இங்கு தருவோம் : சடகோபரந்தாதி சரசுவதி அந்தாதி முதலியன; முதன்மை பெற்றது இராமாயணமாகும்.

சடையப்ப வள்ளலால் ஆதரிக்கப்பட்டார் என்பதற்கு நன்றி மறவாத பண்பாட்டினால் இராமாயணத்தில் பல இடங்களில் இவர் பாராட்டிப் பாடியுள்ள பாடல்களால் விளங்குகின்றது. ஆனாலும் இவர் குலோத்துங்கசோழனின் அவைப்புலவராயிருந்தவரென்றும் அவனது வேண்டுகோளாலேயே கம்பராமாயணத்தைத் தமிழில் படைத்தளித்தார் என்றும் கூறுவர்.

சடையப்ப வள்ளலையிட்டுக் கூறுமிடத்துக் கம்பரின் கவி பின்வருமாறு விளக்கந்தருகின்றது:

சோனார் தொடையன் பரராசசிங்கப்
பெருமான் செழுந்தமிழ்க்கு
கானார் நெல்லின் மலைகோடி
கண்டிநாடு கரைசேரக்
கூனார் கப்பல் ஆயிரத்தில் கொடுபோ
யளித்த கொடைவள்ளல்
மானாகரன் சங்கரன் சேர்
சோழ மண்டலமே

என்ற கவியிலிருந்து 12 ஆம் நூற்றாண்டில் ஈழத்தை ஆண்டு வந்த சோழ தேசத்து மன்னனான பரராசசிங்கன் என்ற அரசனுக்கு நாட்டில் பஞ்சம் நிலவியதால் ஆயிரம் கப்பல்களில் நெல்லு ஏற்றி பஞ்சம் தீர்த்தானென்று அறியக் கிடக்கின்றது. மேலும், கம்பர் ''சக்கரவர்த்தி'' யெனப் போற்றப்பட்டவர்; ''கல்வியிற் பெரியவன் கம்பன்'', ''கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவிபாடும்'', ''வெண்பாவிற்புகழேந்தி — விருத்தமெனும் ஒண்பாவிற்கு உயர்கம்பன் என்ற தொடர்களால் இவரின் புகழ் விளங்கும். ''புகழ்க் கம்பன் பிறந்த தமிழ்நாடு'' என்று அண்மையில் பாரதியார் கூறியுள்ளார்.

கம்பர் சடையப்ப வள்ளலுடன் வளர்ந்து வந்து கல்வி அறிவில் தேர்ச்சியடைந்த காலத்தில் திருவெண்ணை நல்லூர்க் 'காளி''யின் வரப்பிரசாதத்தால் கம்பநாட

னென்று பலரால் அழைக்கப்பட்டார். இவர் தாம் வணங்கி வந்த தெய்வ வரத்தினால் தமிழ்ப் பாடலின் தகைமை கொண்டார் எனவும் அறியலாம். அவர் கவிபாடத் தொடங்கிய காலத்தில்—அவர் பழகிக்கொண்ட கிராம மக்களுடன் சினேகமாய்க் கொண்டு அவர்களின் தொடர் பைக் குறிக்கும் வெண்பாக்களில் ஒன்றை இங்கு தருவோம்:

> மோட்டெருமை வாவிபுக முட்டுவரால் கன்றென்று
> வீட்டளவும் பால் சொரியும் வெண்ணையே—நாட்டில்
> அடையா நெடுங்கதவும் அஞ்சலென்ற சொல்லும்
> உடையான் சடையப்பனூர்.

இவரது புத்திவன்மையையறிந்த அக்காலத்திலிருந்த திருவெண்ணை நல்லூர் சடையப்பமுதலியாரெனும் பிரபு இவரையும் இவரது தாயாரையும் வருவித்து ஆதரித்து வருங்காலத்தில் இவரின் கவித்திறனை அறிந்த சோழன் இவரை சடையப்பவள்ளலிடமிருந்து தருவித்தார். சடையப்ப வள்ளலின் வேண்டுகோளின்படியும் சோழ அரசன் கட்டளையினாலும் இவரும் ஒட்டக்கூத்தரெனும் புலவரும் சேர்ந்து இராமயணத்தைப் பாடத் தொடங்கினர்.

சில நாட்களுக்குப் பின் கம்பரையும் ஒட்டக்கூத்தரை யும் அழைத்து கம்பராமாயணத்தில் எவ்வளவு படலங்கள் பாடியுள்ளீர்கள் என்று அறியத் தரும்படி சோழ அரசன் கேட்டான். இதற்கு ஒட்டக்கூத்தர் ''கடல் கண்ட'' படலம் வரைப் பாடியதாகக் கூற, கம்பர் யாதும் பாடா திருந்தார். கம்பரை அழைத்து நீவீர் எவ்வளவு தூரம் பாடி யுள்ளீர் என்று அரசன் கேட்க, கம்பர் தான் கூத்தனிலும் அதிகம் பாடியதென இருக்கவேண்டுமென்ற கௌரவத் தால் ''திருவணைப்படலம்'' வரை பாடியுள்ளேன் என்று பெருமிதமாகச் சொல்ல இதன் உண்மையை அறிதற்காய்—அரசன்—''அப்படியானால் அப்படலத்தில் ஒரு செய்யுளைப் பிரசங்கியும்'' என்று கேட்கக் கம்பர் உடனே அதற்கு இசைந்து,

குமுதனிட்ட குலவரை—கூத்தரின்
திமிதமிட்டுத் திரைக்கடல் ஊர்புக
அமுத மின்னுமெழுமெனுமா சையால்—
வானவர் துள்ளலானார்

எனக் குறைச்செய்யுளைப் பாடிப் பிரசங்கித்தார். இதன் பின் இராமாயணத்தைப் பாடத்தொடங்கித் தொண்டை நாட்டை அடைந்தனர்.

கம்பர் தொண்டை நாட்டில் வல்லியை விழைந்தது

தொண்டை நாட்டில் திருவொற்றியூரிலிருந்த வல்லி யெனப் பெயர் பெற்ற தாசியை விரும்பிப் பல நாட்கள் அவளுடன் அங்கே மகிழ்ந்திருந்தார் எனவும், ஒருநாள் வல்லியை விட்டுத் திரும்பி வருகிறேனென்று அடுத்த வூருக்குச் சென்றதாகவும் கம்பரின் பிரிவை ஆற்றாது வல்லி யென்பாள் மனங்கலங்கிக் கூறியதைக் கம்பர் எப்படிக் கூறுகிறார் பாருங்கள் :

இல்லென்பார் தாமவரை, யாமவர்தம் பேர் அறியோம்;
பல்லென்று முல்லையையும் பாரித்த கொங்கையையும்
கொல்லென்று காமனையும் கண்காட்டிக் கோபுரக்கீழ்
நில்லென்று போனார் என் நெஞ்சுவிட்டுப் போகாரே

என்றும், வல்லியையிட்டு வர்ணிக்கும் வகையில்,

நடக்கில் அன்னமாகும் நிற்கில் வஞ்சியாங்
கிடக்கி லோவியப் பாவை—கிடந்த தாம்
நடக்கையான் சதுரங்க நாத பண்டிதன்
மடத்துளாள் என் மனத்துறை வல்லியே!

என்றும் கூறி—அவளை விட்டுப் பிரியும்பொழுது அவளுக்கு ஆயிரம் ஈன்ற எருமைகள் தரப்பெற்று அவளுக்கு அணிபல இயற்றித் தருதற்கு மயிலை திருவாலி என்பானைக் கண்டு நல்க வேண்டி அணிவித்து அவளை விட்டுச் செல்ல

இயலாது சேரனாட்டிற்கு உடன் கூட்டிச்சென்றனர். இவர் இராமாயணம் ஒற்றியூரிலிருந்தும், வெண்ணை யூரிலிருந்தும்தான் எழுதினார் என்பதைக் கீழ்க்கூறப் படும் செய்யுளால் அறிக.

கம்பர் இரவில் தம் மாணக்கர் எழுத, தாம் பாடிக் கொண்டிருப்பார். இரவில் எழுதும்பொழுது தீவட்டி பிடித்துக் கொண்டிருக்கையில் அந்த வெளிச்சத்தில்தான் எழுதுவது வழக்கமாகும். தீவட்டி பிடிக்க உதவியில்லாமல் போக தாம் எழுதுவது தடைப்பட்டு விடுமே என்ற பயத் தினால் திருவொற்றியூர் காளியைத் தீவட்டி விளக்குப் பிடிக்க செய்தனரென்பதை—

ஒற்றியூர் காக்க உறைகின்ற காளியே
வெற்றியூர் காக்குந் தன்மெய்ச் சரிதை
பற்றியே பிந்தா தெழுதுதற்கு—நல்லிரவின்
மாணாக்கர் பிந்தாமல் பந்தம் பிடி

என்பதலாறிக.

கம்பர் சடையப்ப வள்ளலது பெரும் நன்றியைப் பல இடங்களில் புகழ்ந்துள்ளார். மேலும் பாலகாண்டம், வேள்விப்படலம், மிதிலைகாண்படலம், அகலிகைப்படலம், நாகபாசப் படலம், சேதுபந்தனப்படலம், மருந்துமலைப் படலம், விடைகொடுத்த படலம், மறையர் வாழி என்ப தாலும் அறிக.

இராமாயணம் பாடியது

வால்மீகி இராமாயணத்தை முன் நூலாகக்கொண்டு தமிழில் இயற்றப்பட்டதால் இது வழி நூலாகும். கம்பர் தம் காவியத்துக்கு இராமாவதாரம் என்றே பெயரிட்டார். இராமாயணம் என்பது இரா-அயநம் என்ற இரு சொல் லாகும். இது இரு சொற்களாலாகிய வடமொழித் தொட ராகும். இது இராமனைப் பற்றி அறிவது எனப் பொருள் படும் வடமொழியில் வான்மீகி இயற்றிய இராமாயணத்

தைத் தழுவிக் கம்பரால் இயற்றப்பட்டது. இவ்விரு நூல்களுக்கும் வேற்றுமை தெரிவதற்காக ஆசிரியர் பெயரையும் இணைத்து கம்பராமாயணம் என்று வழங்குகின்றனர். ஆனால் இவர் தனது சொந்தப் படைப்பு என்று பெருமிதமாகக் கூறக்கூடிய நூலான ''ஏர் எழுபதும்—திருக்கை வழக்கமும்'' முதற்தரமானதாகும். தவிர,

கம்பர் இராமாயணத்தை நாளொன்றுக்கு எழுநூறு செய்யுள்களாக பாடி முடித்தார் ஒட்டக்கூத்தர் தாம் பாடிய செய்யுள்களை கம்பர் பாடிய செய்யுள்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது தனது செய்யுள்கள் இவைக்கு ஈடுவராது எனக் கருதி கிழித்தெறிய எத்தனித்தார். இந்த செயலை அவதானித்த கம்பர் இடைமறித்து இவர் பாடிய உத்தரகாண்டத்தை வேண்டி தாம் பாடிய இராமாயணத்துடன் சேர்த்தாரென அறிய கிடைக்கின்றது. இராமாயணத்தை முழுக்கப்பாடி முடித்த பின் அரங்கேற்றுவதற்காகப் பல வித்துவான்களைக் கையொப்பமிடச் சொல்லி கருதிய பொழுது அவர்களில் பலர்—தில்லையில் தீட்சதர்கள் கையொப்பமிட்டால் எங்களுக்குத் தடை இல்லையெனச் சொல்ல சிதம்பரம் சென்று பல நாட்களாகக் கைகூடாமையால் மனமுடைந்து கடவுளைத் துதிக்க - தெய்வ கதியால் ஒரு புதினம் நிகழ்ந்தது.

### இராமாயணம் அரங்கேறியது

பாம்பு கடித்துக் குழந்தையொன்று இறந்து விட்டதாகப் பிரலாபித்து அவ்வூர் மக்கள் அனைவரும் திரண்டு கூடி அழுது கதறினர். அவ்விடத்திற்குச் சென்றார் கம்பர்.

### பாம்பு கடித்த விஷத்தால் இறந்த குழந்தை உயிர் பெற்றது

குழந்தை இறந்து கிடந்த இடத்தைச் சூழ்ந்து நின்ற மக்கள் இடையே சென்ற கம்பர் - குழந்தை அருகே சென்று பார்த்து மிகுந்த மன வருத்தங்கொண்டு—

ஆழியான் பள்ளியணையே அவன் கடைந்த
பாழிவரையின் மணித்தாம்பே—ஊழியான்
பூணே! புரமெரித்த பொற்சிலையிற் பூட்டுகின்ற
நாணே! அகல நட

என்றும்,

மங்கையொரு பங்கர் மணி மார்பி லாரமே!
பொங்கு கடல்கடைந்த பொற்கயிறே—திங்களையும்
சீறியதன் மேலிருந்த தெய்வத் திருநாணே!
ஏறிய பாம்பே இறங்கு!!

என்றும்,

பாரைச் சுமந்த படஅரவே, பங்கயங்கண்
வீரன் கிடந்துறங்கும் மெல்லணையே!—ஈரமதச்
செஞ்சடையான் பூணும் திருவா பரணமே
நஞ்சுடையாய் தூர நட

என்றும் கம்பராமாயணத்தில் நாகப்பாசப்படலத்தின் செய்யுட்களை எடுத்துக் கூறிக் குழந்தையை எழுப்பினார். இதைக் கண்ணுற்ற தில்லை மூவாயிரவர் ஆச்சரியப் பட்டு, கம்பரை வணங்கி அவர் வேண்டிக் கொண்ட முறைப் படி அரங்கேற்ற மனுப் பத்திரத்தில் கையொப்பமிட்டனர். அதன் பின் குலோத்துங்கச் சோழன் சபையில் இராமாயணக் காவியத்தை வைத்துப் பரிசு பெற்றார் - சிரீரங்கத்தில் இராமாயணம் அரங்கேற்றப்பட்டதெனவும் சரித்திரம் கூறு கின்றது.

கம்பர் குலோத்துங்கன் சபையில் ஏர் எழுபதைப் பாடியதற்குத் தூண்டுகோலாயிருந்த காரணங்களுள் முதலாவது கீழ் தந்துள்ள நிகழ்ச்சியாகும் :

கம்பர் கவிச்சக்கரவர்த்தியாகக் குலோத்துங்க சோழ னின் சமஸ்தானத்தில் வீற்றிருந்த நாட்களுள் ஒருநாள் - புவிச்சக்கரவர்த்தியாகிய குலோத்துங்கன் கெக்கட்ட மிட்டுப் பெரிய சத்தந்தொனிக்கச் சிரித்துவிட்டான்.

அருகில் இருந்த கம்பர் ஆச்சரியப்பட்டு - அரசே, என்ன காரணங்கொண்டு இந்தவிதமான சிரிப்பைக் கொட்டினீர்? இதனால் ஏதும் மகிழ்ச்சியடைந்தால் அதைக் கூற முடியுமா? நாமும் அச்சந்தோஷத்தில் பங்கு பெறலாமே? என்று வியப்புடன் கேட்டார். "கம்பரே - நீரும் எனது பிரஜைகளும் எனது அடிமைகள்தானே என்ற பெருமையை நினைத்துக் குதூகலிப்பை வெளியாக்கிவிட்டேன், இந்த சிரிப்பினால். அதனால் என்ன வியப்பு?" என்றான்.

கம்பர் அடங்காக் கோபங் கொண்டவராய் "என்ன சொன்னீர்? நானும் உமது அடிமையென்றா கருது கிறீர்? இது ஒப்பாது. இது என்னை ஏழ்மைப்படுத்து வதாகும். இந்தச் சொல்லானது என் காதில் நாராசம் காய்ச்சி ஊற்றினதை ஒக்கும்" எனச் சொல்லிக்கொண்டு, இருந்த ஆசனத்தை விட்டுத் திடீரென எழுந்து நின்று - "அரசே! நீவீர் புவிசக்கரவர்த்தி-நானோ கவிசக்கரவர்த்தி - உமக்கு நான் அடிமையாகாது - உமக்கு உமது தேசத்தில் தான் மகிமை உண்டு. ஆனால் எனக்குச் சென்ற தேச மெல்லாம் சிறப்பும் மகிமையும் உண்டு என்பதை உணர்வீ ராகில் நீர் இப்பொழுது சொன்ன வார்த்தையைத் திருப்பிப் பெற்றுக்கொள்ளவும் - அல்லது அச்சொல் சபைக்கு உத வாத அபச்சாரச் சொல்லாகும்" என்று நின்ற இடத்தை விட்டு நகர எத்தனித்தார் கம்பர்.

"கம்பரே! நீவீர் கவிசக்கரவர்த்தியாய்த் திகழ்வது எனது சமஸ்தானத்தில்தான். மற்றைய தேசத்தில் உமக்கு இத்தகைய பெருமை வாய்த்தபடி கிடைக்காது. ஆகையால் சீற்றங்கொள்ளாது அமர்ந்து கொள்ளுங்கள். குடிமக்களுடன் சேர்ந்த அடிமைகளில் நீரும் ஒருவர்தாம். எனது சமஸ்தானத்தைவிட்டுச் சென்றீரானால் இப்பதவி வேறு எங்கும் கிடைக்காது" என்று செருக்குடன் கூறினார். கம்பர் இதைக் கேட்க மனம் பொறுக்காதவராய்த் தனது கிரீடத்தையும் சக்ரவர்த்தி உடை அணி அலங்காரங்களை யும் கழற்றி வைத்துவிட்டு ஒரு மூன்று முழத்துண்டை

உடுத்திக்கொண்டு உப்பரிகையிலிருந்து கீழ் இறங்கி, அரசன் முன்நின்று,

கொல்லிமலைத் தேன்சொரியும் கொற்றவா
நீ முனிந்தால்
இல்லையோ எங்கட்கிடம்?

என்று கூறிக்கொண்டு வெளியேற எத்தனித்தார். இதைக் கண்ணுற்ற குலோத்துங்கன் மேலும் கடின வார்த்தைகள் கூறிக்கொண்டு கம்பரை விலகவொட்டாமல் தடுக்கையில் கம்பர் மேலும் அரசன் முன்நின்று,

மன்னவனும் நீயோ? வளநாடும் உன்னதோ?
உன்னை அறிந்தோ தமிழை ஓதினேன்?—என்னை
விரைந்து ஏற்றுக்கொள்ளாத வேந்துண்டோ?—
உண்டோ,
குரங்கேற்றுக் கொள்ளாத கொம்பு?

என்று தனது கவிச்செருக்கால் கூறிக்கொண்டு சபையை விட்டு வெளியே செல்லலானார். இராமாயணம் பாடிய கம்பருக்கு இத்தகைய நிர்ப்பந்தம் ஏற்பட்டுவிட்டதை நினைத்த ஏனைய புலவர்மார்க்கு மனவருத்தம். ஒரு பக்கத்தில் விட்ட மன சந்தோஷமும் மறு பக்கத்தில் உற்சாகமூட்ட அதிர்ச்சிகொண்டு இருபக்கமும் ஏன் தங்களுள் ஒருவன் - கம்பருடைய வெற்றிடத்துக்கும் போகலாமென்ற ஆசையினால் சபையைவிட்டு வெளி திரும்பியதும் தனது கௌரவமான அணிமணிகளெல்லா வற்றையும் அரசருடன் வாழ உதவாத தமது இல்லத்தி லேயே கைகழுவிவிட்டுவிட்டு, ஒரு சாதாரணத் தொழிலாளி போல இடையில் உடை அணிந்தவராய்ச் சோழநாட்டை விட்டு வெளிக் கிளம்பி நடக்கலானார்.

வேலி என்பவளுக்கு உடைந்த களஞ்சியத்தைக் கட்டிக் கொடுத்தது :

போகும் வழியில் வேலி என்னும் விவசாயப்பண்ணைப் பெண்ணாள்வார், தனது நெற்களஞ்சியத்தைச் சுற்றி

எழுப்பி வரும் சுவரைக்கட்டிமுடிக்க இயலாது ஒரு பிசாசின் கோளாறால் கட்டடம் கட்ட உடைந்து போனதை யிட்டு மனமுடைந்தவராய் துக்கத்துடன் இருப்பதைக் கண்டு, தனது பசிக்கு உணவு கேட்பது எவ்விதம் அடுக்கும் என்று நினைத்து உணவு கேட்பதைவிட்டு கட்டிடத்திற்கு அருகில் சென்று கவனித்தபொழுது, இந்தக் கட்டிடத்தை உடைக்காமல் பாதுகாக்க எனக்கு ஒரு ஆளுதவியில்லை. உம்மால் முடியுமா என்று கேட்டு, உதவியளித்தால் கூலியாக நான் நெல் தருகிறேன் என்று கேட்க, கம்பர் கட்டிடத்திற்கு அருகில் நின்று கட்டிய சுவர் பாறிக்கொண்டு வருவதைக் கண்டு - வேலியல் பரிதாபங்கொண்டு,

மற்கொண்ட திண்புயத்தான் மாநகர்விட்டிங்கு வந்தேன்
சொற்கொண்ட பாவின் சுவை அறிவா ரீங்கிலையோ?
விற்கொண்ட பிறைநுதலாள் வேலிதரும் கூலி
நெற்கொண்டு போமளவும் நில்லாய் நெடுஞ்சுவரே!

என்று பாடினார். என்ன ஆச்சரியம்! சரிந்து கொண்டு போன சுவர் விழாமல் அப்படியே நின்றுவிட்டது பண்ணையாரான வேலி இவரை வணங்கி சுவாமி சந்தோஷப்பட்டு நாழி நெல்லை அளந்து கொடுக்க— கம்பர் நெல்லை வேண்டமறுத்துத் தனது வழியே நடக்கலானார் — அங்கிருந்து ஒரு செட்டி வீட்டுக்குச் சென்று பசிக்கு உணவு கேட்க அவர்கள் மறுத்திட — பொட்டி மக்கள் வீட்டிலும் உணவு கிடைக்கவில்லை. பார்ப்பான் வீட்டில் எட்டடா எட்டு சூத்திரம் சொல்லி என்று கலைத்துவிட்டார்கள். வந்துபோன வழிக்குச் சாணி கரைத்தும் தெளித்து விட்டார்கள். உடனடியாக களைப்பு மேலீட்டினால் வயலுக்கு ஊடாகச் செல்லும் போது எதிர் பக்கம் இருந்து வரப்பின் வழியே ஒரு பெண் தலையில் கலசமேந்தி நடந்துகொண்டு வருவதைக் கண்டார். தூரத்தில் ஒரு கமக்காரன் உழுதுகொண்டு நின்றதையும் கண்டார். கண்டதும் உவகை கொண்டதும் அவனருகுக்குச் செல்லலானார்.

**வேளாளனின் வயலில் மோர்பருகுதல்**

கலசமேந்திச் சென்ற பெண்ணானவள் தான் கையில் வைத்திருந்த பிளாவுக்குள் கொணர்ந்த பழையது கரைத்த மோரை ஊற்றி கணவனுக்கு ஏந்தி நிற்பதைக் கண்டார். பசி மேலீட்டினாலும் தாகம் மேலிட, கமக்காரனுக் கருகிற் சென்று தனது கையை நீட்டினார். இதைக் கண்ட வேளாளன் உடனே பிளாவுடன் வழிப்போக் கனுக்குத் தந்துவிட்டான். களைப்பு மேலீட்டினால் வழிப் போக்கனான கம்பர் மடமடவென்று மோரை மொண்டி விட்டார். அப்பாடா? மோர் பருகி வயிறு நிரம்பியதும் தாகம் தீர்ந்ததும் ஆனந்தங் கொண்ட கம்பரான வழிப் போக்கன் என்ன கைம்மாறு இந்த கமக்காரனுக்குச் செய்ய முடியும்?

''மானம் குலம் கல்வி வண்மை அறிவுடமை தானம் தவம் முயற்சி தாளாண்மை - தேனின் கசிவந்த சொல் லியர் மேல்காமுறுதல் பத்தும் பசிவந்திடப் பறந்து போம்'' என்ற முதுமொழிப்படி, கம்பரான வழிப்போக்கன் தனது பெருமைகளைக் களைந்துவிட்டுக் கையேந்திக் கிடைத்த மோரைப் பருகி உதராக்கினியில் இருந்து எழும்பிய வெப் பத்தைத் தணித்துக்கொண்டார். அதனால் தன்னால் இயலக் கூடிய கைம்மாறு ஒன்றுதான் உண்டு. அதுதான் கம்பரின் செல்வம். அது கவியாகும். உடனே ''செட்டிமக் கள் வாசல் வழி செல்லோமே செக்காரர் பொட்டி மக்கள் வாசல் வழி போகோமே, முட்டிபுகும் பார்ப்பார் அகத்தை எட்டிப்பாரோமே எந்நாளும் காப்பாரே வேளாளர் காண்'' என்ற கவியொன்றைப் பாடிவிட்டுத் தன் பிரயா ணத்தைத் தொடர்ந்தார். அவர் இடம்விட்டுச் சிலதூரம் சென்றதும் களைதெளிந்த உழவன் தனது கலப்பையைப் பிடித்து மறுபடியும் உழத் தொடங்கினான். உழுது கொண்டு சிலதூரம் சென்றதும், உழவுசாலில் கொழு ஆணி தடுக்க, கலீர் என்ற சத்தத்துடன் கலப்பை (ஏர்) இடம் பெயர்ந்தது. கமக்காரன் கொழு ஆணியை விலக்கிப்

பார்த்த பொழுது ஒரு செம்புக் கலசம் மண்ணுக்குள் தோன்றியது. உடனே மண்ணை துளைத்து தனது மனைவி யுடன் பாரமாயிருந்த கலசத்தை உழவுசாலிலிருந்து வெளியே எடுத்தான்.

பொற்கலசம்

மூடியைத் திறந்து பார்த்ததும் பளிச்சென்று மின்னும் ஆபரணங்களும் பொற்காசுகளும் தென்பட்டன. இதைக் கண்ட உழவனும் மனைவியும், இந்தப் புதுமை வழிப் போக்கனின் வாயில்வந்த வாழ்த்துப் பாவினால்தான் நேர்ந்த கொடையாகும் என்று அவனைப் பின் தொடர்ந்து ஓடிச்சென்று வரவழைத்து, பொற்கலசத்தைக் காட்டி அவனின் காலடியில் விழுந்து வணங்கி சாமி இந்த பொருட் கள் நிலத்திலிருந்து வெளிப்பட்டது உமது கிருபையினாலா கையால் இதை நீங்களே எடுத்துச் செல்லுங்கள் என்றார் கள். வழிப்போக்கனான கம்பர் ''இது உமது பிரயாசை யால் கிடைக்கப்பெற்ற செல்வமாகும். இதற்கும் எனக்கும் ஒரு உரிமையுமில்லை. நீங்களே இந்தச் செல்வத்துக்கு உரியர்'' எனக் கூறிக்கொண்டு தன் நடையைத் தொடர்ந் தார்.

கம்பர் பல யோசனைகளையும் மனத்துள் அடக்கி நடந்து செல்கின்ற பொழுது—தனது பசியும் தாகமும் தீர்ந்த வகையை நினைத்தும்—தான் குடிக்கப்போன மோரைக் குடியாது—நீட்டிய கைக்கு இல்லையென் னாமல் அப்படியே பிளாவுடன் தந்த அன்பான கைகளை யிட்டு கமக்காரன் கையின் மகத்துவத்தை எண்ணி எண்ணி மனமுருகினார். வேளாளன் கை எம்மட்டு அருளுடையது. உடனே அவருக்குத் தென்பட்ட உணர்ச்சி படைப்புத்தான் ஏர் எழுபது என்ற காவியமூலம் எழுந்த புகழ்ச்சி நூலாகும்.

ஏர் எழுபதில் முதல் செய்யுளாவது, அகில உலகத்துக் கும் பெருமை தரக்கூடிய விஞ்ஞான வெளிப்படையும் அனு

கிய விழிப்புணர்வும், ஏராளமான மறைந்து கிடக்கும் விமர்சனங்களையும் உள்ளடக்கியதாகும்.

''அலகிலா மறைவிளங்கும் அந்தணர் ஆகுதி விளங்கும் பலகலையாம். தொகை விளங்கும் பாவலர் தம் பா விளங்கும் அவர்குழாம் திருவிளங்கும் மழைவிளங்கும் மனுவிளங்கும் உலகெலாம் ஒளி விளங்கும் உழவர் உழும் உழவாலே'' என்று உழவர்களின் பெருமையையும் அவர்கள் உலகப் புகழுக்கு முதற்காரணமாயுள்ளவரெனக் கூறியுள்ளார், ஆகையால் இந்தத் தத்துவங்களும் பொருட்களும் உள்ளடக்கிய கவியை வேறொரு புலவரால் ஆக்க முடியவில்லை. ஆகவேண்டிய சந்தர்ப்பமும் இருக்கவில்லை. ஆகையால் ஏர் எழுபது - அதாவது ஏர் என்பது கலப்பை-உழவு — இந்தக் கலப்பையில் அடங்கியுள்ள அதாவது இணைக்கப்பட்ட எழுபது பகுதிகளைக் கொண்ட நுட்பமான கருவியாகும். இந்த கலப்பையிலுள்ளடங்கிய எழுபது பகுதிகளும் தமது தொழில்களைச் சரிவர செய்யா விட்டால் உழவுத் தொழில் நடைபெறமாட்டாது. இந்த ஏரென்னும் கருவியில் ஒரு சிறு பகுதிதன்னும் உடைந்து விட்டாலோ, காணாமல் போனாலோ கலப்பை தனது தொழிலைச் சரிவர செய்யாது. உழவுத் தொழிலை நிறுத்த வேண்டியதுதான். இதனால்தான் கமத்தொழிலுக்கு இன்றியமையாத அடிப்படை அம்சங்களைக் கொண்ட தேவைகளை ஒருங்குசேர்த்த வெண்பா ஒன்றை ஔவையார் கூறியுள்ளார். இது அகில உலகத்துக்கும் பொருத்தமான கவித்திறமைக்கு அடிப்படை அறிவுறுத்தலாகும்.

வேளாண்மைத் தொழிலில் தங்கள் சீவியத்தை நம்பியிருப்பவர்கள் உலக மக்களுள் நூற்றுக்கு எழுபத்தைந்து என்று கூறினால் அது மிகை ஆகாது. அத்தனை மக்களும் வானம் பார்த்த பூமியையே தங்களுக்கு உணவளிக்கும் நிலமென்று கருதுவார்கள். இப்படியான நிலமகளை,

அல்லது பூமாதேவியை நம்பியுள்ள மக்களைப் பார்த்து வள்ளுவர் பெருமான்,

இலமென்று அசைஇ இருப்பாரைக் காணின்
நிலமெனும் நல்லாள் நகும்

என்கிறார். உண்ண உணவுக்கு வகையில்லையென்று உடலுழைப்பில்லாது சோம்பேறிகளாய் இருப்பவர்களைப் பார்த்துக் கூறப்பட்ட அறிவுரையாகும்.

கமத்தொழிலைக் கொண்டு நடத்த வேண்டியதற்கு ஏதுக்களான இயற்கை வளத்தை அடிப்படை அம்சங்களென்று தெய்வப்புலமை ஔவையார் இனியது நாற்பதில் கூறியிருக்கும் தேவைகளைச் சுட்டிக்காட்டும் அறிவுரைகளைப் பார்க்கலாம். ''ஏரும் இரண்டுளதாய் இல்லத் தே,வித் துளதாய் நீரருகே சேர்ந்த நிலமுளதாய்— ஊரருகே சென்றுவர அணித்தாய் செய்வாரும் சொற் கேட்டால் என்றும் உழவே இனிது.''

இத்தகைய அருமையான விளக்கத்தை விஞ்ஞான ரீதியில் மக்களுக்கும் வழுவாது வைத்த புலவர் தனிப்பட்ட புகழ்பெற்ற ஔவைப்பிராட்டி ஆகும். ஒருமுறை உலக உணவுப்பிரச்சனை ஸ்தாபனத்தால் ஒழுங்கு செய்யப்பட்ட கருத்தரங்கில் வெளிநாட்டு நிபுணர்களைக் கொண்ட சபையில் மேற்குறித்த செய்யுளை அவர்கள் முன்வைத்து விவசாயத்துக்கு உதவ வேண்டிய அம்சங்களை விவரித்துக் கூறியபொழுது அவர்கள் ஒவ்வொருவரும் வியப்புற்றார்கள். இப்படியான கருத்தை உள்ளடக்கிய கவியோ இலக்கியமோ தங்கள் தேசத்தில் அறியமுடியவில்லையென்று அகில உலகத்தின் பல பக்கங்களிலுமிருந்து வந்த நிபுணர்களும் பிரதிநிதிகளும் கூறினார்கள். அது மட்டுமல்லாமல் இந்தக் கவியைத் தமிழில் எழுதி ஆங்கிலத்தில் ஆக்கஞ் செய்துகொண்டும் போனார்கள். இதேபோல கம்பரால் கூறப்பட்ட முதல் கவியான ''அலகிலா மறை விளங்கும்'' என்ற செய்யுளையும் எடுத்துச் சென்றார்கள். பாரத தேசத்

தின் விவசாயத்தின் நிலைமையை எடுத்துக் காட்டுவது மேற்குறித்த அரும்பெரும் காவியங்களென்பதையிட்டு பெருமைப்பட வேண்டியவர்கள் பாரத மக்களே. கலப்பை அல்லது ஏரின் மிக முக்கியமான பகுதியெனக் கருதியுள்ள ''கொழு ஆணி''—இதை முதற்கருவியாக்கிக் கூறிய கவி பிரதானமான பகுதியானது கொளுஆணி. ''கொளு ஆணி கொண்டன் றிக்குவலயம் சீர் நிரம்பாதே'' - என்று கூறியுள்ளார். இந்தக் குவலயமானது உலகம் முழுவதையும் உள்ளடக்கியுள்ளது. ஒரு கமக்காரன் உழவுத் தொழிலில் ஈடுபட்டு உழைப்பவன் செய்ய வேண்டிய ஒவ்வொரு கருமத்தையும், ஏரின் எழுபது பகுதிகளையும் கூறியுள்ளது ''ஏர் எழுப''தாகும். இதைக் கையாளும் கமக்காரனின் கையைத்தான் ''திருக்கை''யென அருள் கொடுத்துப் புகழ்ந்துள்ளார் கம்பர். ''திருக்கை வழக்கத்தின்'' முதல் கையானது ''மேழி பிடிக்கும் கை''. மேழி என்பது ஏரை பிடிக்கும் பகுதியானது. இதற்கு மேழி என்று பெயர். இப்படிப்பட்ட மேழியைப் பிடிக்கும் கையைத்தான் வேல் பிடிக்கும் வேந்தர்கள் தங்கள் நாடு செழிப்பதற்கு எதிர் பார்க்கிறார்கள் என்பதையும் ''மேழி பிடிக்கும் கை, வேல் வேந்தர் நோக்கும் கை'' என்றும், மோதிரம் போட்டவர்களின் கையிலிருந்து பெறும் தருமத்தை விசேஷமெனக் கருதி ''ஆழிதரித்தே அருளுங்கை'' என்று கமக்காரன் கையைப் பெருமைப்படுத்திக் கூறுகிறார்.

ஏர் எழுபதையிட்டுப் புகழ்ந்து விவரிக்கப்பட்ட எழுபது செய்யுளையும் ஒவ்வொன்றாக விமர்சனம் செய்வதென்றால் இராமாயணக் காவியத்திலும் பார்க்க பெரிய நூலாகி விடும். ஆகையால் அந்த செய்யுட்கள் ஒவ்வொன்றையும் கூர்ந்து வாசித்து, கருத்துக்களை அறிந்து கொள்வது சாதாரண கமக்காரனால் முடியாத காரியமாகும். தவிர இந்தச் செய்யுட்களின் கருத்தையும் அவற்றுள் புதைந்துள்ள அறிவுரைகளையும் அருமை பெருமைகளையும் கமக்காரர்களுக்கு விரிவுரை செய்யும் வகுப்புகளையோ

உபந்நியாசங்களையோ கொண்டு நடத்துவதாக நான் அறியவில்லை. சாதாரணமான நம்நாட்டு வேளார்களில், கம்பர் என்றொருவர் இருந்தார், அவர் கமக்காரர்களைப் புகழ்ந்து பாடியிருந்தார் என்று அறிந்தவர்களும் மிகவும் சிலரே. ஆனால் ஒருவராவது ஏர் எழுபதின் மகத்து வத்தையோ அதனுள் புகுத்தியுள்ள நுட்பமான விமர்சனங் களையிட்டோ அல்லது வேளாளனுக்கு ஏர் எழுபதினால் கிடைக்கப்பெற வேண்டிய உற்சாகத்தை வற்புறுத்தியோ குறிப்பிட்ட புலவர் பெருமான்களை அறிய முடியவில்லை. எவரைக் கேட்டாலும் ஏர் எழுபதா?—அதென்ன எழுபது ஏர்களா—ஏர் என்றாலே சிலருக்கு விளங்குவதில்லை. திருக்கை வழக்கமா? இந்த வழக்கம் எந்த ஊரில் இருக்கின்றது? மேலும் ஏர் எழுபதை எழுதியவரையோ பாடியவரையோ ஆக்கியவரையோ தெரிந்தவர்களையோ காண முடியவில்லை. நான் ஒரு பெரிய புலவரிடம் கேட் டேன். மூன்று நாள் கம்பர் விழாவில் போயிருந்து நடந் தேறிய விஷயங்களை ரசித்தேன். அங்கிருந்து வெளியேறிய ஒருவரைப் புலவரெனக் கருதி—''எனக்கு ஒரு சிறு ஐமிச்சம் இருக்கு சேர்'' ஒரே ஒரு கேள்விதான் மன்னித்துக் கொள்ள வும் என்று சொல்லிக் கொண்டு கேட்டேன். இராமாயணத் தையா ஏர் எழுபதையா கம்பர் முதலில் பாடியுள்ளார்? இதில் எது முந்தைய காவியமாகும் என்றேன். அவர் என் முகத்தையே சரிவரப் பார்க்காமல் ஏர் எழுபது கம்பர் தான் பாடியதென்றது இல்லை. ஆரோ ஏர் எழுபதைப் பாடிவிட்டுக் கம்பரின் பெயரைக் கொடுத்திருப்பார்கள் என்றார். நான் திகைத்துப் போனேன். புலவர் குழாங்களுள் அப்படியும் ஒரு முறைகேடான செயலைச் செய்பவர்கள் இருக்கிறார்களோ? நான் கடந்த அறுபது வருடங்களாய்ப் போற்றிப் புகழ்ந்த கம்பர் இந்தக் காவியத்தைப் படைக்கவில்லையா? இத்தகைய பெருங் காவியத்தின் படைப்பை ஒருவர் பாடுபட்டுப் பல நாட்கள் செலவழித்து நூலாக்கி அரங்கேற்றி மற்றொருவரின் பெயரைத்தான் ஆக்கியோன் என்று

கொடுப்பதில் யாருக்குப் பெருமை—நூலை எழுதிய வனுக்கா அல்லது அவரால் படைக்கப்பட்ட பிற மனி தனுக்கா—அப்படியானால் இராமாயணத்தையும் கம்பர் தான் தமிழில் ஆக்கினார் என்பதற்கு சாட்சி யாராகும்? என்ற கேள்விகள் என் மனதில் உதித்தன. ஆனால் இவை களைக் கேட்டு அறிவதற்குள் அருகில் நின்ற புலவரைக் காணவில்லை. என்ன விந்தை! புலவர்களுக்குள்ளும் இந்தப் பொறாமை என்ற ஆமை ஊர்கின்றதா?

இராமாயணம் ஆரியர்களுக்கும் திராவிடர்களுக்கும் இடையே நடந்த போர் என்று ஜவகர்லால் நேரு தனது மகள் இந்திராவுக்கு எழுதிய கடிதங்களுள் ஒன்றில் கூறியுள் ளார் என்பதை நான் அறிந்தேன். மேலும் இராவணனின் படையினர்களையும், இராவணனையும் அசுரர்கள் என்று கூறியது சுத்தப்பொய்யும் அர்த்தமற்றதுமாகும் எனவும் கூறி இராவணன் அசுரன் இராட்சதனாயிருந்தால் சுக்ரீவனும் விபீஷணனும் மனிதர்களானது எப்படி என்று பலர் கூறிக்கொள்வதையும் கேட்டுள்ளேன். ஆரியர்களுக் கும் திராவிடர்களுக்கும் அன்று மூண்டபகை இன்றும் நிலவி வருகிறதுதானே?

ஆனால் கம்பர் இராமனுக்கும் இராவணனுக்கும் நடந்த போரினால் பொதுமக்களுக்கு ஏற்பட்ட நன்மைகள் என்ன என்றும், கம்பர் பொதுமக்களாகிய வேளாள குலத்துக்கு எழுதிவைத்த ஏர் எழுபது என்ற நூலானது பார்க்குமளவுக்கு இது படிப்பில்லா கல்வி அறிவில்லாதவர் களுக்கு என்றும் இராமாயணம் கல்வி அறிவுற்றவர்களுக்கு மட்டும்தான் என்பதும் விளங்குகின்றதால், கம்பர் எளிய கமக்காரர்களுக்கு மிகுந்த கௌரவம் கொடுத்திருக்கிறார். இதை நினைத்து உண்மையில் கம்பரின் படைப்பான ஏர் எழுபது மிகவும் விரும்பத்தக்கதும் பொதுமக்களுள் முது கெலும்பு போன்ற விவசாயிகளுக்கு பலனளிக்கும் விஞ்ஞான அறிவுறுத்தலாகப் பிரயோசனப்படுவதாகும். இராமா

யணத்தைப் போன்று பொழுதுபோக்கிற்கும் காசிற்கும் நாவல்களைப் போன்றதல்ல. தெய்வ சக்தி வாய்ந்த இராமன் மனிதவர்க்கத்தைச் சேர்ந்த திராவிட இனத்துடன் போரிலிருந்து வெற்றி கொண்டதில் வியப்பில்லை; என்ன பெருமை என்று சில கருத்தரங்குகளில் பேசிக்கொள்வார்கள். மேலும் இராமனின் வெற்றிக்குக் காரணமாயிருந்தது விபீஷணனாகும். அப்படிப்பட்ட விபீஷணன் இராமனில் கொண்ட அன்பும் பக்தியுமல்ல, தான் இலங்கை அரசைப் பெற்றுக்கொள்ள வேண்டுமென்ற சுயநலத்தாலே தான் என்றும் கூறுவார்கள்.

கமக்காரனை மக்களுக்கு அறிமுகப்படுத்தும் வகையில் அவனது தொழில் எவ்விதமாக நடைமுறையில் அனுஷ்டிக்கின்றன என்று குறிப்பிடுவதைக் கூறுகையில்—

கார்நடக்கும் படிநடக்கும் காராளர் தம்முடைய
ஏர்நடக்குமெனில் இயல் இசை நாடகம் நடக்கும்
சீர்நடக்கும் திறல் நடக்கும் திருவறத்தின் செயல்நடக்கும்
பார்நடக்கும் எங்கும் பசி நடக்கமாட்டாது!

என்ற கவியை ஏர் எழுபதில் கூறியுள்ளார்.

ஆகையினாலே முகில்களால் ஆளப்பட்ட கமக்காரர்களை ''கார் ஆளர்'' என்ற காரணப்பெயரைக்கொண்டு காராளர் கைதான் ஏனைய மக்களுக்குக் கை கொடுக்கும் திருக்கையாகுமென திருக்கை வழக்கத்தில் கூறியுள்ளார்.

திருக்கை வழக்கத்தையும் ஏர் எழுபதையும் அறிய வேண்டிய மக்களுக்கு இந்த அரிய பெரிய நூலே காணக் கிடைக்காமல் போனதினால்தானோ கம்பரின் பெருமையையிட்டு சாதாரண பெருந்தொகையைக் கொண்ட பொதுமக்களுள் விவசாயத்தொழிலில் ஈடுபட்டுள்ள மக்கள் பெருமிதப்பட்டதாகச் சான்றுகளோ எடுத்துக்காட்டுகளோ விமர்சனங்களோ கருத்தரங்குகளோ நடைபெறவில்லை. இது தமிழறிஞர்கள் கவனிக்க வேண்டிய குறைபாடாகும்.

## கம்பரின் கவித்திறமைக்குப் பெருமை

சொற்சுவை பொருட்சுவை அமைய கற்பனை நயம் செறியக் கம்பரால் இயற்றப்பட்ட இராமாயணம் என்னும் நூல் தமிழின் பெருமைக்குக் காரணமாய் அமைந்த ஒப்பற்ற காவியமாகும். தமிழில் உள்ள மிகப்பெரிய காவியங்களுள் இராமாயணமே முதன்மையானதாகும். ''கம்ப நாடன் கவிதையில் போல் கற்றோர்க்கு இதயம் களியாதே'' என்றும், ''கம்பன் கவியே கவி'' என்றும் புலவர்கள் இதனைப்போற்றியுள்ளார்கள்,

★ ★ ★

''உலகெலாம் ஒளி விளங்கும் உழவர் உழும் உழவாலே'' என்ற கூற்றின்படி உழவு தொழிலில் ஈடுபட்டு வாழும் உலகடங்கிலுமுள்ள விவசாய மக்களுக்கு அறிவூட்டும் நோக்கமாகப் பாடியிருக்கும் ''ஏர் எழுபது, திருக்கை வழக்கம்'' என்னும் நூலானது, தமிழைவிட உலகடங்கிலும் வழங்குகின்ற ஏனைய பாஷைகளிலும் வெளிவர வேண்டும் என்ற காரணத்தால் ஏர் எழுபது திருக்கை வழக்கத்தை முதன் முதலாக ஆங்கில பாஷையில் மொழி பெயர்த்து வெளியிடுகிறோம். இதற்கு உதவி அளித்தவர்களுக்கு உலக மக்கள் சார்பாக எனது மனமார்ந்த நன்றி உரித்தாகுக. இந்த ஆங்கில மொழிபெயர்ப்பு மிகுந்த சிரமமெடுத்து ஆக்க வேண்டியதாயிற்று. அதில் குறை குற்றங்கள் அனேகம் இருக்கலாம். 'குற்றம் களைந்து குறைபெய்து வாசித்தல்' கற்றறிந்தமாந்தர் கடன் என்ற முதுரையின் படி—தங்கள் தங்கள் அறிவுக்கு ஏற்பத் திருத்தி அமைத்துக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கின்றேன்.

சி. காராளசிங்கம்

## ஏர் எழுபது—திருக்கை வழக்கம்

தேமதுரத் தமிழோசை உலகமெலாம்
பரவும் வகை செய்தல் வேண்டும்

—பாரதியார்

ஏர் எழுபது—திருக்கை வழக்கத்தை எழுதிய கம்பர் பெருமான் இந்நூலானது உலகத்திலுள்ள பொது மக்களாகிய உழவர் பெருமக்களுக்கு எனக் கருதி எழுதிய நன்நூலாகும். இந்நூலில் பொதிந்துள்ள விளக்கங்களெல்லாம், தான் பிறந்து வளர்ந்த நாடாகிய திருவெண்ணெய் நல்லூரிலும் அடங்கலிலுமுள்ள வேளாண் மக்களுக்கு மாத்திரமல்ல, தமிழ் பேசும் பாரத மக்களுக்கு மாத்திரமல்ல, உழவுத் தொழிலில் ஈடுபட்டு அதன் வாயிலாக உயிர் வாழும் மகான்கள் அனைவருக்கும் பிரயோசனப் படுவதற்காக எழுதி வெளியிடப்பட்ட நூலாகும். ஆனால், இந்த நூலானது தமிழ்பாஷையில் மாத்திரம் எழுதப்பட்டுள்ளது. கம்பர் பெருமானுக்குச் சடையப்ப வள்ளலால் ஆங்கில பாஷையைக் கற்பிக்க முடியவில்லை. அவர்கள் காலத்தில் ஆங்கில பாஷை நம் தமிழ் நாட்டில் குடி புகவில்லை.

கம்பர் தனது நூலின் மகத்துவத்தைப் பரப்ப வேண்டுமெனக் கருத்தில் கொண்டு போனாலும் அவரின் எழுபது கவிதைகளில் ஒன்று உலக மக்களுக்கெனப் பிரத்தியேகமாகக் கூறியிருப்பதைக் காண்க—

அலகிலா மறை விளங்கும் அந்தணராகுதி விளங்கும்
பலகலையாம் தொகை விளங்கும், பாவலர்தம்
பாவிளங்கும்
மலர்குலாம் திருவிளங்கும் மழை விளங்கும் மனு
விளங்கும்
உலகெலாம் ஒளி விளங்கும் உழவர் உழும் உழவாலே!

உலகத்துக்கு வெளிச்சம் கொடுப்பது உழவுக் கலப்பை யாகும். இங்கு அபூர்வமான கருவியையிட்டும் அதை வழங்குபவர்களாகிய வேளாளர்களையிட்டும் புகழ்ந்துரைக் கப்பட்டுள்ள ஏர் எழுபதையும்—திருக்கை வழக்கத்தையும் தமிழிலிருந்து ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து, பாரதி யாரின் எண்ணத்தை பூர்த்தி செய்து பின்பு கம்பரின் மனதையும் தேற்றிக் கொள்ள உலக மக்களின் வேளாளர் களின் கரங்களில் இந்த நூலைத் தவழச் செய்வது தமிழ னாகப்பட்ட எங்கள் கடமையாகும்.

திருவள்ளுவருடைய குறளானது உலகத்தில் 18 பாஷை களில் துலங்குவதாக அறிகிறோம். கம்பருடைய ஏர் எழுபதும் திருக்கை விளக்கமும், உழவுத் தொழிலைத் தமது முதற் தொழிலாகக் கருதும் மக்களுக்கு உதவுவதாக முதன் முதலாக ஆங்கிலத்திலும் மொழி பெயர்த்து இந்நூலை வெளியிடும் வாய்ப்பை கம்பர் பெருமான் எனக்கு அளித்ததற்கு என் மனமார்ந்த நன்றியும், பிரார்த்தனையும் அவருக்குச் சேருவதாக...

பிரமன் மண் உலகத்தைப் படைத்து முதன் முதலாக உழவர்களைப் படைத்து ஏனைய மக்களையும் படைத்தார் என ஏர் எழுபது கூறுகின்றது.

### அருட் சிறப்பு

பிரமதேவன் உலகத்தைப் படைக்குமுன் உலகம் மக்களைக் காக்கும் வேளாளர்களைப் படைத்தாரென்க.

கம்பன் புகழ் வாழ்க
கன்னித் தமிழ் வாழ்க

# ஏரெழுபது

## பாயிரம்

### கணபதி

கங்கைபெறுங் காராளர் கருவியெழு பதுமுரைக்க
அங்கை பெறும் வளைத்தழும்பு முலைத்தழும்பு மணியமலை
மங்கை பெருந் திருவுருவாய் வந்துறைந்தார் தமைவலஞ்செய்
கங்கை பெறுந் தடவிகடக் களிற்றானைக் கழல்பணிவாம்.

### திரிமூர்த்திகள்

நிறைக்கரிய வந்தணர்க ணெறிபரவ மனுவிளங்கத்
தறைக்குரிய காராளர் தமதுவரம் பினிதோங்க
மறைக்குரிய பூமனையும் வண்டுளபத் தாமனையும்
பிறைக்குரிய நெடுஞ்சடிலப் பெம்மானை யும்பணிவாம்.

### நாமகள்

திங்களின்மும் மாரிபெயச் செகத்திலுயிர் செழித்தோங்கக்
கங்கைகுலா திபர்வயலிற் கருவீறத் தொழுகுலத்தோர்
துங்கமக மனுநீதி துலங்கிடவை யம்படைத்த
பங்கயன்ற னாவிலுறை பாமடந்தை பதந்தொழுவாம்.

## சோழ மண்டலச் சிறப்பு

ஈழ மண்டல முதலென வுலகத்
தென்னு மண்டலத் தெறிபடை வேந்தர்
தாழு மண்டலஞ் செம்பியன் மரபினோர்
தாமெ லாம்பிறந் தினியபல் வளத்தின்
வாழு மண்டலங் கனகமு மணிகளும்
வரம்பில் காவிரி குரம்பினிற் கொழிக்குஞ்
சோழ மண்டல மிதற்கிணை யாமெனச்
சொல்லு மண்டலஞ் சொல்வதற் கில்லையே. 4

## சோழராசன் சிறப்பு

முடியுடைய மன்னவரின் மூவுலகும் படைத்துடைய
கொடியுடைய மன்னவரிற் குலவுமுதற் பெயருடையான்
இடியுடைய வொலிமெழுநீ ரெழுபத்தொன் பதுநாட்டுக்
குடியுடையான் சென்னிபிற ரென்னுடையார் கூறீரே. 5

## மகாநாட்டுச் சிறப்பு

மந்தர மனைய திண்டோண் மணிமுடி வளவன் சேரன்
சுந்தர பாண்டி யன்றன் சுடர்மணி மகுடஞ் சூட
அந்தணர் குலமு மெல்லாவறங்களும் விளங்க வந்த
இந்திர னோலக் கம்போ லிருந்தது பெரிய நாடே. 6

## வேளாண்குடிச் சிறப்பு

ஆழித் தேவர் கடலானா ரல்லாத் தேவ ரம்பலத்தார்
ஊழித் தேவர் தாங்கூடி யுலகங் காக்க வல்லாரோ
வாழித் தேவர் திருமக்கள் வையம் புரக்கும் பெருக்காளர்
மேழித் தேவர் பெருமைக்கு வேறுந் தேவர் கூறேனே. 7

## வேளாளர் சிறப்பு

தொழுங்குலத்திற் பிறந்தாலென் சுடர் முடிமன் னவராகி
எழுங்குலத்திற் பிறந்தாலென் னிவர்க்குப்பின் வணிகரெனுஞ்

செழுங்குலத்திற் பிறந்தாலென் சிறப்புடைய ரானாலென்
உழுங்குலத்திற் பிறந்தாரே யுலகுய்யப் பிறந்தாரே. 8

## அருட் சிறப்பு

அழுங்குழவிக் கன்புடைய தாயேபோ லனைத்துயிர்க்கும்
எழுங்கருணைப் பெருக்காள ரெளியரோ யாம்புகழ
உழுங்கொழுவிற் கருவீறி யுலகமுதற் கருவாகச்
செழுங்கமலத் தயனிவரைச் செய்துலகஞ் செய்வானேல். 9

பாயிரம் முற்றிற்று.

## வேளாண் குலச் சிறப்பு

வேதியர்த முயர்குலமும் விறல்வேந்தர் பெருங்குலமும்
நீதிவளம் படைத்துடைய நிதிவணிகர் தங்குலமுஞ்
சாதிவளம் படைத்தடைய தாயனைய காராளர்
கோதில்குலந் தனக்குநிக ருண்டாகிற் கூறீரே. (1)

## உழவுநாட்கோடற் சிறப்பு

சீர்மங் கலம் பொழியுந் தெண்டிரைநீர்க் கடல்புடைசூழ்
பார்மங்கலம் பொழியும் பல்லுயிருஞ் செழித்தோங்குங்
கார்மங் கலம்பொழியும் பருவத்தே காராளர்
ஏர்மங் கலம்பொழிய வினிதுழநாட் கொண்டிடினே. (2)

## உழவுச் சிறப்பு

நீர்விழாக் கொளவளர்ந்த நிலமெல்லாந் தம்முடைய
சீர்விழாக் கொளவிளக்குந் திருவிழாப் பெருக்காளர்
ஏர்விழாக் கொளினன்றி யெறுழ்க்கரிதேர் மாப்படையாற்
போர்விழாக் கொளமாட்டார் போர்வேந்த ரானோரே.

## அலப்படைச் சிறப்பு

குடையாளு முடிவேந்தர் கொலையானை தேர்புரவி
படையாளு மிவைநான்கும் படைத்துடைய ரானாலென்

மடைவாளை வரும்பொன்னி வளநாடர் தங்கள்கலப்
படைவாளைக் கொண்டன்றிப் பகையறுக்க மாட்டாரே.

### மேழிச் சிறப்பு

வாழிநான் மறையோர்கள் வளர்க்கின்ற வேள்விகளும்
ஆழியா னுலகளிக்கு மடல்வேந்தர் பெருந்திருவும்
ஊழிபே ரினும் பெயரா வுரனுடைய பெருக்காளர்
மேழியால் விளைவதல்லால் வேறொன்றால் விளையாவே.

### ஊற்றாணிச் சிறப்பு

நீற்றோனு மலரோனு நெடியோனு மென்கின்ற
தோற்றாள ரவராலே தொல்லுலகு நிலைபெறுமோ?
மாற்றாத காவேரி வளநாட் டுழுங்கலப்பை
ஊற்றாணி யுளதாயி னுலகுநிலை குலையாதே. (6)

### நுகத்தடிச் சிறப்பு

உரையேற்ற செங்கதிரோ னொளிநெடுந்தேர் பூண்டநுகத்
திரையேற்ற கடலுலகிற் செறியிருளை மாற்றுவது
விரையேற்ற விருநிலத்தோர் வறுமையொடு வீழாமே
கரையேற்று நுகமன்றோ காராள ருழுநுகமே. (7)

### நுகத்துளைச் சிறப்பு

வளைத்ததிரைக் கடல்சூழ்ந்த வையத்தோ ரெல்லார்க்குந்
துளைத்ததுளை பசும்பொன்னி னணிகிடக்குந்
துளைத்தல்லாற்
றிளைத்துவருஞ் செழும்பொன்னித் திருநாட ருழுநுகத்திற்
றுளைத்ததுளை போலுதவுந் துணையுளதோ சொல்லீரே.

### நுகத்தாணிச் சிறப்பு

ஒராணித் தேரினுக்கு முலகங்க ளனைத்தினுக்கும்
பேராணிப் பெருக்காளர் பெருமைக்கு நிகருண்டோ

காராணிக் காவேரி வளநாட ருழுநுகத்தின்
சீராணிக் கொப்பதொரு சிறந்தாணி செப்பீரே. (9)

## பூட்டாங்கயிற்றுச்சிறப்பு

நாட்டுகின்ற சோதிடத்தி னாண்பொருத்த நாட்பொருத்தங்
காட்டுகின்ற கயிறிரண்டுங் கயிறல்ல கடற்புவியில்
நீட்டுபுகழ்ப் பெருக்காளர் செழுநுகத்தோ டுழும்பகடு
பூட்டுகின்ற கயிறிரண்டும் புவிமகண்மங் கலக்கயிறே. (10)

## தொடைச் சிறப்பு

தடுத்தநெடு வரையாலுந் தடவரைக ளெட்டாலும்
உடுத்த திரைக் கடலாலு முலகினிலை வலியாமோ?
எடுத்த புகழ்ப் பெருக்காள ரெழுநுகத்தோ டிணைப்பகடு
தொடுத்ததொடை நெகிழாதே லுலகுதொடை
நெகிழாதே. (11)

## கொழுச் சிறப்பு

வேதநூன் முதலாகி விளங்குகின்ற கலையனைத்தும்
ஓதுவா ரெல்லாரு முழுவார்தந் தலைக்கடைக்கே
கோதைவேள் மன்னவர்தங் குடைவளமுங் கொழுவளமே
ஆதலா லிவர் பெருமை யாருரைக்க வல்லாரே. (12)

## கொழுவாணிச் சிறப்பு

செழுவான மழைவாரிதிங்கடொறும் பொழிந்தாலுங்
கெழுநீரா நிலமடந்தை கீழ்நீர்கொண் டெழுந்தாலும்
வழுவாத காவேரி வளநாட ருழுகலப்பைக்
கொழுவாணி கொண்டன்றிக் குவலயஞ்சேர் நிரம்பாதே

## தாற்றுக்கோற் சிறப்பு

வெங்கோபக் கலிகடந்த வேளாளர் விளைவயலுட்
பைங்கோல முடிதிருந்தப் பார்வேந்தர் முடிதிருந்தும்

பொங்கோதைக் கடற்றானைப் போர்வேந்தர் நடத்துபெருஞ்
செங்கோலை நடத்துங்கோ லேரடிக்குஞ் சிறுகோலே. (14)

உழவெருதின் சிறப்பு

வானமழை பொழிந்தாலும் வளம்படுவ தெவராலே
ஞானமறை யவர்வேள்வி நலம்பெறுவ தெவராலே
சேனைகொடு பொருமன்னர் செருக்களத்திற் செகுக்குமத
யானைவலி யெவராலே—யிவரெருத்தின் வலியாலே. (15)

அதன்சுவற்றுச் சிறப்பு

கண்ணுதலோன் றனது திருக் கண்டத்திற் படிந்தகறை
விண்ணவரை யமுதூட்டி விளங்குகின்ற கறையென்பார்
மண்ணவரை யமுதூட்டி வானுலகங்காப்பதுவும்
எண்ணருஞ் சீர் பெருக்காள ரெருதுசுவ லிடுகறையே.

பகடுபூட்டற் சிறப்பு

ஊட்டுவார் பிறருளரோ வுலகுதனி லுழுபகடு
பூட்டுவார் புகழன்றிப் பிறர்புகழும் புகழாமோ
நாட்டுவார் சயத்துவச நயப்பாரை யிவர்க்குநிகர்
காட்டுவார் யார்கொலிந்தக் கடல்சூழ்ந்த வையகத்தே

ஏர்பூட்டற் சிறப்பு

பார்பூட்டுந் திசையனைத்தும் பகடுகளும் பரம்பூணா
போர்பூட்டுங் காமனுந்தன் பொருசிலைமேற் சரம்பூட்டான்
கார்பூட்டுங் கொடைத்தடக்கைக் காவேரி வளநாடர்
ஏர்பூட்டி னல்லதுமற் றிரவியுந்தேர் பூட்டானே. (18)

ஏர்நடத்தற்சிறப்பு

கார்நடக்கும் படிநடக்கும் காராளர் தம்முடைய
ஏர்நடக்கு மெனிற்புகழ் சாலியலிசைநா டகநடக்கும்

சீர்நடக்குந் திறநடக்குந் திருவறத்தின் செயனடக்கும்
பாரீநடக்கும் படைநடக்கும் பசிநடக்க மாட்டாதே. (19)

## உழுநர் சிறப்பு

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாருந்
தொழுதுண்டு பின்செல்வா ரென்றேயித் தொல்லுலகில்
எழுதுண்ட மறையன்றோ விவருடனே யியலுமிது
பழுதுண்டோ கடல்சூழ்ந்த பாரிடத்திற் பிறந்தோர்க்கே.

## உழுவின் சிறப்பு

அலகிலா மறைவிளங்கு மந்தணரா குதிவிளங்கும்
பலகலையாத்தொகை விளங்கும் பாவலர்தம் பாவிளங்கு
மலர்குலாந் திருவிளங்கு மழைவிளங்கு மனுவிளங்கும்
உலகெலா மொழிவிளங்கு முழவருமு முழவாலே. (21)

## படைச்சாலின் சிறப்பு

பழுதுசால் வகையறியாப் பழமறையோர் பெருவேள்விக்
குழுதுசால் வதுகலப்பை யுயர்வான தென்றக்கால்
எழுதுசால் பெருங்கீர்த்தி யேராளும் பெருக்காளர்
உழுதசால் வழியன்றி யுலகுவழி யறியாதே. (22)

## மண்வெட்டிச் சிறப்பு

மட்டிருக்குந் திருமாது மகிழ்ந்திருக்கும் பூமாது
முட்டிருக்குஞ் செயமாது முன்னிருப்பார் முதுநிலத்து
விட்டிருக்கும் கலிதொலைத்து வேளாளர் தடக்கையினில்
கொட்டிருக்க வொருநாளுங் குறையிருக்க மாட்டாதே.

## வரம்புகோலுதற் சிறப்பு

மெய்வரம்பா நிற்கின்ற வேதநூ னெறிவரம்பாம்
இவ்வரம்பு மவ்வரம்பு மிப்புவிக்கு வரம்பாமோ?

பொய்வரம்பு தவிர்த்தருளும் புவிமடந்தை திருமைந்தர்
செய்வரம்பு திருத்தாரேற் றிசைவரம்பு திருந்தாதே. (24)

## எருக்கூடைச் சிறப்பு

அடுத்திறக்கிப் பெருங்கூடை யளவுபட வேயெருவை
எடுத்திறக்கித் தலைமேலே கொண்டவர் தா
மிடையிடையே
கொடுத்திறக்கி நிலமகளைக் கும்பிட்டு வணங்காரேல்
படுத்திறக்கித் திரிவார்தம் பழிமறுக்க மாட்டாரே. (25)

## சேறுசெய்தற் சிறப்பு

வெறுப்பதெல்லாம் பொய்யினையே வேளாளர் மெய்யாக
ஒறுப்பதெல்லாங் கலியினையே யுள்ளத்தால்
வெள்ளத் தாற்
செறுப்பதெல்லாம் புல்லினையே செய்யின்வள
மறிந்தறிந்து
மறிப்பதெல்லாஞ் சேற்றினையே வளம்படுதற்
பொருட்டாயே. (26)

## பரம்படித்தற் சிறப்பு

வரம்படிக்க மலர்பரப்பி வயலடிக்க வரம்பு தொறுங்
குரம்படிக்க மணிகொழிக்குங் குலப்பொன்னித் திருநாடர்
பரம்படிக்க வுடைந் தளைந்த பழனச் சேற் றுரமன்றி
உரம்பிடிப்பப் பிறிதுண்டோ வுண்டாயி னுரையீரே. (27)

## வித்துவிளைத்தற் சிறப்பு

பத்திவிளைத் திடுந்தெய்வம் பணிவார்க்குந் தற்பரமா
முத்திவிளைத் திடுஞான முதல்வருக்கு மின்னமுதம்
வைத்துவிளைத் திடுவார்க்கும் வல்லவர்க்கும் பெருக்காளர்
வித்துவிளைத் திடிலன்றி வேண்டுவன விளையாவே. (28)

## முளையின் சிறப்பு

இறைமயங்கா தருள்விளங்குஞ் செயன்மயங்காத்
திறல்வேந்தர்
நிறைமயங்கா வணிகேசர் நிலைமயங்கா வந்தணர்கள்
மறைமயங்கா தொருநாளு மனுமயங்கா துலகத்தின்
முறைமயங்கா தவர்வயலின் முளைமயங்காத்
திறத்தாலே. (29)

## நாற்றங்காற் சிறப்பு

ஏறுவளர்த் திடுமுகிலு மிசைவளர்க்கு மெனவுரைப்பின்
ஆறுவளர்த் திடுவதுசென் றடை கடலைத் தானன்றோ?
வேறுவளர்ப் பனகிடப்ப வேளாளர் விளைவயலின்
நாறுவளர்த் திடிலன்றி ஞாலமுயிர் வளராதே. (30)

## நாறுபறித்தற் சிறப்பு

வெறுத்துமீன் சனிபுகிலென் வெள்ளிதெற்கே யாயிடிலென்
குறித்தநாள் வரம்பழியாக் குலப்பொன்னித் திருநாடர்
மறித்துநாட் டிடநின்ற வளவயலி னிடைநாற்றைப்
பறித்துநாட் கொண்டதற்பின் பார்பசிக்க மாட்டாதே.

## நாற்றுமுடி சுமந்த சிறப்பு

மாணிக்க முதலாய மணியழுத்தித் தொழில் சமைத்த
ஆணிப்பொன் முடிவேந்த ரணிமுடியு முடியாமோ?
பேணிப்பைங் கோலமுடி பெருக்காளர் சுமவாரேற்
சேணுக்குந் திசைப்புறத்துஞ் செங்கோன்மை செல்லாதே.

## வயலில் முடி சேர்த்தற் சிறப்பு

தென்னன் முடி சேரன்முடி தேங்குபொன்னி நாடன்முடி
கன்ன முடி கடல்சூழ்ந்த காசினியோர் தங்கண்முடி
இன்னமுடி யன்றியுமற் றெடுத்துரைத்த முடிகளெல்லா
மன்னுமுடி வேளாளர் வயலின்முடி கொண்டன்றோ? (33)

## முடிவிளம்புதற் சிறப்பு

வெய்யகலி வலிதொலைக்கும் வேளாளர் விளைவயலிற்
செய்யின்முடி விளம்பாரேல் விளம்புவன சிலவுளவோ?
மையறுமந் தணர்விளம்பார் மறைமனுமன் னவர்
விளம்பார்
ஐயமறு புலவோரு மருந்தமிழ்நூல் விளம்பாரே. (34)

## கைப்பாங்கின் சிறப்பு

மெய்ப்பாங்கு படக்கிடந்த வேதநூல் கற்றாலென்
பொய்ப்பாங்கு படப்பிறரைப் புகழுநூல் கற்றாலென்
செய்ப்பாங்கு படக்கிடந்த செழுஞ்சாலி நன்னாற்றைக்
கைப்பாங்கு பகுத்துநடக் கற்றாரே, கற்றாரே! (35)

## நடவுமுனைச் சிறப்பு

உலகத்திற் பகடுழக்கு மோங்குமுடித் திறல்வேந்தர்
அலறத்திண் பகடுழக்கு மதுவுமொரு முனையாமோ?
உலகத்திற் பகடுழக்கு முயர்முடிகொள் வேளாளர்
சிலவருழச் சிலவர் நடு முனையன்றே திருமுனையே. (36)

## பயிர்விளைத்தற் சிறப்பு

ஏராலே சேறாக்கி யெருவாலே கருவாக்கி
நீராலே பைங்கூழை நிலைப்பிப்பார் தமையன்றிக்
காராலே காவேரி நதியாலே காசினியில்
ஆராலே பசிதீர்வா ரகலிடத்திற் பிறந்தோரே. (37)

## பயிர்முதற் சிறப்பு

அந்தணர்க்கு வேதமுத லரசருக்கு வெற்றிமுதல்
முந்தியசீர் வணிகருக்கு முதலாய முதலுலகில்
வந்தவுயிர் தமக்கெல்லா மருந்தாக வைத்தமுதல்
செந்தமிழ்க்கு முதலாய திருவாளர் செய்முதலே. (38)

### பயிர் வளர்த்தற் சிறப்பு

சீர்வளரு மறைவளருந் திறல்வேந்தர் முடிவளரும்
பேர்வளரும் வணிகருக்குப் பெருநிதிய மிகவளரும்
ஏர்வளருந் திருவளரு மிசைவளருங் கடல்சூழ்ந்த
பார்வளருங் காராளர் பயிர்வளருந் திறத்தாலே. (39)

### ஏற்றத்தின் சிறப்பு

ஊற்றுமேல் வருகின்ற கார்விடினுங் கடல் சுவறி
யாற்றுநீ ரறவெள்ளி யரசனுந்தெற் காயிடினும்
ஏற்றமே கொடுநாளு மிறைத்துலகும் விளைவித்துக்
காத்துமே யுயிர் வளர்த்தல் காராளர் தங்கடனே. (40)

### துலைநீரின் சிறப்பு

கலையிட்ட மறைவேந்தர் கனல்வேள்வி வளர்ப்பதுவும்
மலையிட்ட புயத்தரசர் மணிமகுடஞ் சூட்டுவதுந்
தலையிட்ட வணிகருயர் தனமீட்டப் படுவதுவும்
நிலையிட்ட வேளாளர் துலையிட்ட நீராலே. (41)

### வரம்பு திருத்தற் சிறப்பு

மேடுவெட்டி வளப்படுத்தி மிகவரம்பு நிலைநிறுத்திக்
காடுவெட்டி யுலகநெறிக் காராளர் காத்திலரேல்
மேடுவெட்டிக் குறும்பறுக்கும் வேல்வேந்த ரெற்றாலுங்
காடுவெட்டி யுழுதுவருங் கலிகளைய மாட்டாரே. (42)

### புழுதிச் சிறப்பு

எழுதொணா மறைவிளங்கு மியலிசைநா டகம் விளங்கும்
பழுதிலா வறம்விளங்கும் பார்வேந்தர் முடிவிளங்கும்
உழுதுசால் பலபோக்கி யுழவருழக் கியவெங்காற்
புழுதியால் விளையாத பொருளுளவோ புகலீரே. (43)

### பைங்கூழ்ச் சிறப்பு

கெட்டாரைத் தாங்குதலாற் கேடுபடாத்
தொழிற்குலத்தோர்
ஒட்டாரென் றொருவரையும் வரையாத உயர்நலத்தோர்
பட்டாங்கு பகர்ந்தோர்க்கும் பசியகலப் பைங்கூழை
நட்டாரே வையமெல்லாம் நலந்திகழ நட்டாரே. (44)

### பயிருக்குத் தண்ணீர் பாய்த்தற் சிறப்பு

கார்தாங்குங் காவேரி நதிதாங்குங் காராளர்
ஏர்தாங்கு வாரன்றி யாவரே தாங்க வல்லார்
பார்தாங்கு மன்னுயிரின் பசிதாங்கும் பைங்கூழின்
நீர்தாங்கு வாரலரோ நிலந்தாங்கு கின்றாரே. (45)

### களை களைதற் சிறப்பு

வளைகளையு மணிகளையு மலர்களையும் வரும்பலவின்
சுளைகளையுங் கொடுகரைக்கே சொரிபொன்னித்
திருநாடர்
விளைகளையுஞ் செஞ்சாலி வேரூன்றிக் கோடுகொள்ளக்
களைகளையா விடில்வேந்தர் கலிகளைய மாட்டாரே. (46)

### கருப்பிடித்தற் சிறப்பு

திருவடையுந் திறலமையுஞ் சீரடையுஞ் செறிவடையும்
உருவடையு முயர்வடையு முலகெலா முயர்ந்தோங்குந்
தருவடையுங்கொடையாளர் தன்வயலிற் செஞ்சாலி
கருவடையிற் பூதலத்திற் கலியடைய மாட்டாதே. (47)

### ஈற்றேறும் சிறப்பு

ஏற்றேறு மரன்சிறப்புக் கெழிலேறு மகத்தழல்கள்
மாற்றேறு மரசர்முடி வளர்ந்தேறும் வளமைமிகும்
ஊற்றேறுங் குலப்பொன்னி யுறைநாட ரிடுஞ்சாலி
ஈற்றேறும் போதுகலி யீடேற மாட்டாதே. (48)

### பசுங்கதிர்ச் சிறப்பு

முதிராத பருவத்து முற்றியநற் பருவத்துங்
கதிராகி யுயிர்வளர்ப்ப திவர்வளர்க்குங் கதிரன்றோ
எதிராக வருகின்ற வெரிகதிருங் குளிர்கதிருங்
கதிராகி யுயிர்வளர்ப்ப துண்டாயிற் காட்டீரே. (49)

### நெற்குலை வளைதற் சிறப்பு

அலைவளையும் புலிவேந்த ரங்கையிற்றங் கியவீரச்
சிலைவளையு மதன்கருப்புச் சிலைவளையுங்
கொடுங்கலியின்
தலைவளையுங் காராளர் தண்வயலிற் செஞ்சாலிக்
குலைவளையும் பொழுதினிற்செங் கோல்வளைய
மாட்டாதே. (50)

### சோறிடுஞ் சிறப்பு

அறங்காணும் புகழ்காணு மருமறையி னாகமத்தின்
திறங்காணும் செயங்காணுந் திருவளர்க்கு நிதிகாணும்
மறங்காணுங் கருங்கலியின் வலி தொலைத்த காராளர்
புறங்காணுஞ் சோறிட்டுப் புறங்காணப் புகுந்திடினே (51)

### அரிகதிர் வழங்குஞ் சிறப்பு

அரிவுண்ட பொற்கதிரை நெற்கதிர்நே ராதுலர்க்குப்
பரிவுண்ட பெருவார்த்தை புதிதன்று பழைமைத்தே
விரிவுண்ட கடற்படிவு மேகங்கண் மறுத்தாலுந்
திரிவுண்டோ காராளர் செயலினுக்குச் செப்பீரே. (52)

### அரிசூட்டின் சிறப்பு

கோடுவரம் பிடையுலவுங் குலப்பொன்னித் திருநாடர்
நீடுபெரும் புகழ்வளரு நிலமடந்தை திருமக்கள்
பீடுவரம் பிடைவயலிற் பிறைவானிற் கடிகின்ற
சூடுவரம் பேறாதேற் சுருதிவரம் பேறாதே. (53)

### களஞ்செய்தற் சிறப்பு

சீரான விறல்வேந்தர் செருவிளைத்துச் செல்லுவதும்
பேரான மனுநீதி பிறழாது விளங்குவதும்
நீராலே செஞ்சாலி விளைவித்து நெறிநடத்துங்
காராளர் விளைவயலிற் களம்பண்ணும் பொருட்டாலே.

### படுசூட்டின் சிறப்பு

அடிசூட்டு மலர்வாளிக் காமனுடல் சூடுவதுங்
கொடிசூட்டு மணிமாடக் கோபுரம்பொன் சூடுவதும்
முடிசூட்டி வயவேந்தர் மூவுலகு மிறைஞ்சுபுகழ்
படிசூட்டி யிருப்பதெல்லாம் படுசூட்டின் வலியாலே (55)

### அரிமிதி கோலின் சிறப்பு

முரட்டின்மிகு வெம் பகைவர்
முரண் கெடுத்திவ்வுலக மெல்லாம்
தெருட்டி நெறி செல்கின்ற
செங்கோன்மை செலுத்துங்கோல்
வெருட்டின்மிகுங் கலியை
வேரோடு மகற்றும்கோல்
சுருட்டிமிகத் தமர்ந்துசெந்நெற்
சூடுமிதித்திடும் கோலே (56)

### போர் செய்தற் சிறப்பு

காராளுங் கரியினமும் பரியினமுங் கைவகுத்துப்
போராளு முடிவேந்தர் போர்க்கோல மெந்நாளுஞ்
சீராளுஞ் செழும்பொன்னித் திருநாடர் புகழ்விளக்கும்
ஏராளுங் காராள ரிவர்செய்யும் போராலே (57)

### போர்க்களம் பாடுதற் சிறப்பு

வளம்பாடுங் குடைமன்னர் மதயானை படப்பொருத
களம்பாடும் பெருஞ்செல்வங் காசினியிற் சிறந்தன்று
தளம்பாடுந் தாரகலத் தாளாளர் தம்முடைய
களம்பாடும் பெருஞ்செல்வங் காசினியிற் சிறந்ததே. (58)

### போரகளச் சிறப்பு

பார்வேந்தர் பெருஞ்செல்வம் பழுதுபடா தொருநாளும்
ஏர்வேந்தர் பெருஞ்செல்வ மிழிவுபடா திருத்தலினான்
தேர்வேந்தர் போர்க்களத்துச் சிலர்வெல்வர் சிலர்தோற்பர்
ஏர்வேந்தர் போர்க்களத்து ளிரப்பவருந் தோலாரே. (59)

### போர்செய்வோர் நெல்லரிவாரை விளித்தற் சிறப்பு

நாவலோ நாவலென நாடறிய முறையிட்ட
ஏவலோர் போர்க்களத்தி லெதிர் நிற்பர் முத்தமிழ்தேர்
பாவலோ ரிசைவல்லோர் பற்றுடைய பதினெண்மர்
காவலோ ரெல்லாருங் கையேற்கும் பொருட்டாலே. (60)

### போர்படுத்தற் சிறப்பு

எடுத்தபோர்க் களத்தரச ரிணைப்பகடு சிலநடத்திப்
படுத்தபோர் பயந்ததனாற் பார்தாங்கி வாழ்வதெல்லாம்
எடுத்தபோ ருழவரு மிணைப்பகடு சிலநடத்திப்
படுத்தபோர் வையகத்தில் விளங்குகின்ற பயனாலே (61)

### நெற்பொலிச் சிறப்பு

விற்பொலியும் பெருங்கீர்த்தி வேளாளர் விளைவயலில்
நெற்பொலியுண் டாமாகி னிலமகளும் பொலிவுண்டாம்
பொற்பொலிவுண்டாமுலகம் புகழ்ப்பொலிவுண்டாம்
புலவோர்
சொற்பொலிவுண்டாங் கலியின்றுயர் பொலிய
மாட்டாதே. (62)

### நெற்குவித்தற் சிறப்பு

தன்னிகரொன் றொவ்வாத தலம்வளர்க்கும் பெருக்காளர்
மன்னுபெருங் களத்தினிடை மாருதத்திற் றூற்றியிடுஞ்
செந்நெல்லைப் பொலிவாலே செம்பொன்மலை
யெனக் குவித்தே
அந்நெல்லின் பொலியாலே யவனியுயிர் வளர்ப்பாரே (63)

## கூடைச் சிறப்பு

ஆடையா பரணங்க ளணிந்துமுடி சுமந்திடலும்
ஓடையா னையினெருத்த முயர்ந்துலகந் தாங்குதலும்
பேடையோ டனநீங்காப் பெருங்கழனிப் பெருக்காளர்
கூடையா னதுகையிற் கொண்டுகளம் புகுந்திடினே. (64)

## பொலிதூற்றுங் கூடைச் சிறப்பு

வலியாற்று மன்னவர்க்குந் தேவருக்கு மறைவர்க்கும்
ஒலியாற்றும் பேருலகி லுய்யவமு திடுங்கூடை
கலிமாற்றி நயந்தபுகழ்க் காராளர் தம்முடைய
பொலிதூற்றுங் கூடைக்குப் போதுவதோ புகலீரே. (65)

## பொலிகோலின் சிறப்பு

சீற்றங்கொள் கருங்கலியைச்செறுக்குங்கோல் செகதலத்துக்
கூற்றங்கொண் மனுநெறியை யுண்டாக்கி வளர்க்குங்கோல்
ஏற்றங்கொள் வயவேந்தர்க்கெப்பொருளுங் கொடுத்துலகம்
போற்றுஞ்சொற் பெருக்காளர் பூங்கையினிற்
பொலிகோலே. (66)

## விரைக்கோட்டைச் சிறப்பு

திருத்தோட்டுப் பிரமாவாற் செனிக்கின்ற வுயிர்களுக்கும்
உருத்தோட்டும் புகழுக்கு முரிமைமுறை வளர்க்கின்ற
வரைக்கோட்டுத் திணிபுயத்து வளர்பொன்னித் திருநாடர்
விரைக்கோட்டை கொண்டன்றோ வேந்திரிடுங்
கோட்டைகளே (67)

## கல்லறைச் சிறப்பு

தளர்ந்தவுயி ரித்தனைக்குத் தாளாள ரெண்டிசையும்
வளர்ந்தபுகழ்ப் பெருக்காளர் வளமையா ருரைப்பாரே
அளத்துலக மனைத்தாளு மரசர்வே தியர்புலவர்
களந்துவைக்க வையுகுத்த கல்லறைகளுண்பாரேல் (68)

### மெய்ப்பேறு

அரியாதனத்தின் மேலிருந்தே யம்பொற்குடைக்
கீழரசியற்றும்
பெரியார்பக்கல் பெறும்பேறும் பேறேயல்ல பெருக்காளர்
சொரியாநிற்பச் சிலர்முகந்து தூற்றாநிற்பச் சிலரளத்து
புரியாநிற்பப் பெறும்பேறுக்கது நேரோக்கப் போதாதே

### வாழ்த்து

பார்வாழி நான்மறைநூற் பருணிதரர் குதிவாழி
கார்வாழி வளவர்பிரான் காவேரி நதிவாழி
பேர்வாழி பெருக்காளர் பெருஞ்செல்வக் கிளைவாழி
ஏர்வாழி யிசைவாழி யெழுபத்தோன் பதுநாடே. . (70)

ஏரெழுபது முற்றிற்று

# ஏர் எழுபது—தெளிவுரை

கவிச் சக்கரவர்த்தி கம்பர் பாடியனவற்றுள் ஒன்று ஏர் எழுபது. ஏரின் பெருமை, ஏருழும் வேளாளர் பெருமை, ஏருக்குரிய கருவிகளின் பெருமை முதலியனவற்றை எழுபது பாடல்களில் எடுத்துக் கூறப்பட்ட நூல். ஏர்—அழகு என்பது பொருள். ஏருழும் கருவிக்கும் ஏர் என்பது பெயர். இங்கு ஏர் என்பது ஆகுபெயராக ஏருழும் வேளாளரைப் பற்றிக் கூறுவது. தன்னை ஆதரித்த சடையப்ப வள்ளலைப் புகழ்ந்துரைக்கக் கம்பர் ஏர் எழுபதினைப் பாடினார் எனக் கூறுவர். இது தொல்காப்பிய வாகைத்திணைக்கிளை நிலையின்பாற்படும்.

## பாயிரம்

பாயிரம் என்பது ஒரு நூலுக்குக் கூறப்படும் முன்னுரையாகும். 'ஆயிரமுகத்தான் அகன்ற தாயினும் பாயிரமில்லது பனுவலன்றே' என்பது நன்னூல். இங்கு இறை வணக்கம் முதலாக ஒன்பது பாடல்கள் பாயிரமாக வந்துள்ளன.

### கணபதி

ஒரு நூல் இயற்றும்போது புலவன் தான் பாடவிருக்கும் நூலைக் காக்கும்படி இறைவனை வேண்டுவது மரபு. பொதுவாகத் திருமால் காக்கும் கடவுளாகையால் திருமால் வணக்கம் முதற்கண் கூறப்பெறும். இங்கு கணபதி (விநாயகர்) வரைக்கும் கூறப்பட்டுள்ளது, தடையின்றி ஒரு காரியம் நிறைவேறச் செய்பவன் கணபதியாகையால்

1. கங்கை மரபிற் றோன்றிய வேளாளரது ஏருழும் கருவி எழுபதினையும் எடுத்துக் கூறப் பார்வதி தேவியின் வளைத் தழும்பும், முலைத் தழும்பும் அழுந்தப் பெற்ற ஏகாம்பரநாதரை வலமாகச் சுற்றி வரும் நீண்ட

கைகளையுடைய விகட விநாயகனது பாதத்தினை வணங்குவோம்.

(ஏகாம்பர நாதர் காஞ்சிபுரத்தில் எழுந்தருளியுள்ளவர். உமையம்மை மணலால் இலிங்கமமைத்து வழிபட்டு வரும்போது கம்பாநதி பெருக்கெடுத்து வந்து இலிங்கத்தை யழிக்க, செய்வதறியாது உமாதேவி இலிங்கத்தை ஆரத் தழுவிக் கொண்டாள் என்பது புராணம்) திருத்தொண்டர் புராணம் திருக்குறிப்புத் தொண்ட நாயனார் செ. 64.

திரிமூர்த்திகள்

2. சால்புடையமைக்கு உரியவர்களாகிய அந்தணரது நெறி விளங்கவும், மனு தரும சாத்திரம் நிலைத்தோங்கவும் பூமி செழித்தற் குரியவராகிய வேளாளர் தம் வரப்பு எல்லை உயரவும் பிரமதேவன், திருமால், சிவன் ஆகிய மும்மூர்த்திகளையும் பணிவோம்.

(சால்பு - அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம் ஆகிய நற்குணங்கள்).

நாமகள் துதி

3. திங்கள் மும்மாரி பெய்யவும் அதனால் உயிர்கள் செழிப் புற்று விளங்கவும் - வயல்களில் நெற் பயிரின் கரு சிறக் கவும், அந்தணர் வளர்க்கும் யாகங்கள் இனிது நடை பெறவும் உலகம் படைத்த பிரம தேவனின் நாக்கினில் வசிக்கும் கலைமகளது பாதத்தை வணங்குவோம்.

சோழ மண்டலச் சிறப்பு

4. ஈழ மண்டலம் முதலாகப் பல்வேறு மண்டலங்களின் மன்னர்கள் வணங்கும் மண்டலம் யாதெனில், சிபிச் சக்கரவர்த்தியின் குலத்தில் தோன்றிய மன்னர்கள் பிறந்து பல்வளங்களும் நிரம்பப் பெற்ற மண்டலம் யாதெனில் காவிரி வளங் கொழிக்கும் சோழமண்டல மாகும்.

ஈழம் முதலாகச் சொல்லப்படும் மண்டலங்களெல்லாம் இச் சோழ மண்டலத்தின் முன், புகழால் வளத்தால் தாழும் மண்டலங்களேயாகும்,

## சோழர் சிறப்பு

5. முடியும் அடையாளக் கொடியும் உடைய மன்னர்களாகிய சோழ, சேர, பாண்டியருள் மிகச் சிறப்புடையவன் யாரெனக் கேட்பின், இடியும் கீழ்ப்பட்டுப் போகும்படி ஒலி மிகுந்த நீரையுடைய கடல் சூழ்ந்த உலகில் எழுபத்தொன்பது குடி உடையவனாகிச் செங்கோல் செலுத்தும் சோழனே ஆவான்; பிறர் என்ன சிறப்புடையோர் கூறுங்கள்?

## மகா நாட்டுச் சிறப்பு

6. மந்தரமலை போலும் திண்மையான தோள்களையும் சோழ, சேர, பாண்டியரது மும்முடிகளையும் சூடிக் கொண்ட சோழனால் எல்லா அறங்களும் நலம்பெற அவனது கொலு மண்டபம் இந்திரனது ஒலக்க மண்டபம் போல் சிறந்திருந்தது.

—(ஒலக்க மண்டபம் - மன்னன் கொலுவீற்றிருக்கும் மண்டபம் - இந்திரனது ஒலக்க மண்டபம், சுதர்மை என்பதாகும்).

## வேளாண்குடிச் சிறப்பு

7. சக்கரப் படையினைத் தாங்கிய திருமால் கடலில் வாழ்பவர்; சிவன் திருச்சிற்றம்பலத்தே நடனமாடுவார்; பல்லூழி காலங்களிலும் அழியாத படைக்கும் கடவுளாகிய பிரமன் மக்களைக் காக்க வல்லவராவார். மக்கள் வாழ்வதற்குக் காரணமாக இருக்கும் மேழித் தேவராகிய வேளாளரின் பெருமைக்கு எதிராக வேறொரு தேவரின் பெருமையைக் கூறமாட்டேன்,

### வேளாளர் சிறப்பு

8. மேற் குலங்கள் என்று கூறப்படும் அந்தணர், அரசர், வணிகர் ஆகிய குலங்களில் பிறந்து என்ன பயன்? அவர்கள் உலகிற்கு நேர்முகமாக உதவி செய்ய இயலாதவர். ஆனால் மக்களது பசியினைத் தீர்த்து உயிர் வாழச் செய்யும் வேளாளரே சிறந்த பிறப்புடையவர்.

### அருட் சிறப்பு

9. பசியால் அழும் குழந்தைகளுக்குப் பாலூட்டும் தாய் போல, எல்லா உயிர்களிடத்தும் கருணையுடன் உணவூட்டும் வேளாளர் என்னால் புகழ்ந்து கூறுவதற்கு எளியராவாரோ? பிரமதேவன் உலகத்தைப் படைப்பதற்குமுன் உலக மக்களைக் காக்கும் வேளாளரைப் படைப்பின் நன்மையாகும்.

## நூல்

### 1. வேளாண் குடிச் சிறப்பு

உயர்ந்த குலங்கள் எனக் கூறப்படுகின்ற அந்தணர், அரசர், வணிகர் ஆகியோரது குலங்கள் யாவும், மக்கள் வளம் பெறத் தாய் போன்ற வேளாளரது குலத்திற்கு நிகராகாது.—(தாய் குழந்தைக்குப் பாலளிப்பது போல் வேளாளர் மக்கள் உயிர் வாழ உணவளிப்பர்)

### 2. உழவு நாட்கோட் சிறப்பு

மழை பொழியும் பருவத்தில் வேளாளர் ஏர்மங்கலம் பாடி விழா நாட் கொண்டு ஏர் பூட்டுவார்களாயின் உலகின் உயிர்கள் பலவும் செழித்தோங்கும். (ஏர்மங்கலம் : நல்ல நாள் குறித்துப் பொன்னேர் பூட்டும்போது பாடும் பாட்டு

### 3. உழவுச் சிறப்பு

நிலமெல்லாம் நீர் பரந்து திருவிழாக் கொண்டாடும் காராளரது ஏர் விழா நடைபெறவில்லையெனில், நால்

வகைப் படையுடைய மன்னர் போர் விழாக் கொண்டாட இயலாது. (திருவிழா, ஆடிப் பெருக்கு விழா எனக் கூற லாம்.)

## 4. அலப்படைச் சிறப்பு

(அலம்+படை=அலப்படை)

நால் வகைப் படையும் வெண் கொற்றக் குடையும் உடைய வேந்தரும் சோழ நாட்டு வேளாளரது கலப்பை யாகிய வாள் இல்லாமல் பகைவரை வெல்ல இயலாது. (படை வீரருக்கும் உழவு இன்றியமையாதது ஆகையால்) அலகு—உழுபடை ('அலகுடை நீழலவர்' -திருக்குறள்: உழவு செய். 4)

## 5. மேழிச் சிறப்பு

(மேழி—கலப்பை முனை—கலப்பையை அழுத்திப் பிடிக் கும் கருவி.)

அந்தணர்கள் வளர்க்கின்ற யாகங்களும், மன்னரது பெருஞ் செல்வமும் ஊழிக் காலத்திலும் அழியாத பெருமை யுடைய வேளாளரது மேழியினால் ஏற்படுவதல்லாமல் வேறொன்றினாலும் விளையாது, ('உழவினார் கை மடங் கின் இல்லை விழைவதூஉம் விட்டேம் என்பார்க்கு நிலை'— குறள் : உழவு 6)

## 6. ஊற்றாணிச் சிறப்பு

கலப்பையை ஏர்க்காலில் சேர்க்கும் இடத்தில் பிணிக் கும் மரத்தாலியன்ற ஆணி. சிவன், பிரமன், திருமால் ஆகிய மும்மூர்த்திகளால் உலகம் நிலை பெற்றதாகுமோ? பின்னெவரால் நிலை பெற்றதாகுமெனில் காவிரி வளம் பெற்ற சோழ நாட்டு வேளாளரது கலப்பையின் ஊற்றாணி கழன்று விழாது நிலையாக நிற்குமாயின் உலகம் நிலை குலையாது நிற்கும்.

### 7. நுகத்தடிச் சிறப்பு

சூரியனுடைய தேரில் பூட்டப்பட்ட நுகத்தடி உலக இருளைப் போக்க வல்லது. ஆனால் வேளாளரது நுகத் தடி உலக மக்களின் வறுமையை நீக்கி, பசியைப் போக்கி மனத் துயராகிய இருளைப் போக்க வல்லது.

### 8. நுகத் துளைச் சிறப்பு

கடலால் சூழப்பட்ட உலகத்தார்க்கு உறுப்பாகிய செவியில் துளைக்கப்பட்ட துளையானது பொன் அணிகள் தாங்கப் பெறும் துளையாகும். ஆனால் வேளாளரது நுகத் தடியில் துளைக்கப்பட்டுள்ள துளை போன்று பிறர்க்கு உதவுகின்ற தன்மையைக் கொண்டு உள்ளதோ?

### 9. நுகத்தாணிச் சிறப்பு

(நுகத்தடியின் நடுவே பொருத்தப்படும் ஆணி) சூரியனுடை ஒரே சக்கரத்தேரின் அச்சாணியும் உலகினைப் பாதுகாக்கும் வேளாளரது உழும் நுகத்தடியில் உள்ள ஆணியைப் போன்று சிறப்புடையதல்ல. உழுவார் உலகத் தார்க் காணியென்பது குறள்.

### 10. பூட்டாங்கயிற்றுச் சிறப்பு

நன்மை தீமைகளை ஆராய்கின்ற சோதிட நூல் வல்லாரால் உணர்த்தப்படுகின்ற பொருத்தங்கள் இரண்டு. நாள் பொருத்தம், நாட் பொருத்தம் என்பன. அவன் பயன் விளைவிக்கும் கயிறுகள் எனப்படா. வேளாளர் செழு நுகத்தோடு பகடுகளை ஏரிற் பிணிக்கும் இரண்டுகயிறுகளே பயனுடையன. அவை பூமா தேவியின் மங்கல நாண் போன்றன.

### 11. தொடைச் சிறப்பு

மேழிக்கும் ஏர்க்காலுக்கும் தொடர்புண்டாகும்படி தொடுக்கப்படும் உழவுக் கயிறு. தொடை—தொடுத்தல். உயர்ந்த மேரு மலையாலும், அட்ட திக்கு மலைகளாலும் கடலாலும் உலகின் நிலைமை வலியுடைத்தாமோ எனில்

இல்லையென்றே கூறலாம். வேளாளர் எருதுகளின் கழுத்தில் பிணிக்கப்படும் தொடை கயிற்றின் கட்டானது தவிராதிருக்குமானால் உலகவொழுக்கு நெகிழாது, தளராது.

மலைகள் மேல் நோக்கி வளர்ந்திருப்பதைப் போன்று கீழ் நோக்கியும் வேரூன்றியிருப்பதால் உலகம் பிணிப்புண்டிருக்கின்றது. எனவே அவை பூமிக்கு ஆதாரங்களாக இருப்பவை (பூதரங்கள்) என அழைக்கப்பட்டன.

## 12. கொழுச் சிறப்பு

(கலப்பையின் அடியில் பொருத்தப்பட்டுள்ள இரும்புக் கருவி.)

வேதத்தை ஓதும் அந்தணர், முனிவர் முதலியோர் உழுவாரது தலைவாசலில் உள்ளவராவார். அரசரது குடைச் சிறப்பும் வேளாளரது கொழுவின் வளமே. ஆகையால் வேளாளர் பெருமையை உருவாக்க வல்லவர் யார்?

முனிவர்களுக்கு ஒரு வேளையுணவு வேண்டுமாகையால் அவர்கள் வேளாளர் தலைவாசலில் உள்ளார் எனக் கூறப்படுகின்றது.

## 13. கொழுவாணிச் சிறப்பு

(கலப்பை முனையில் கொழுவை வைத்துத் தைத்திருக்கும் ஆணி)

வானம் மாதந்தோறும் பொழியினும், கீழ்நீர்ப் பாங்கு சிறந்திருப்பினும், தவறாமல் பெருக்கெடுத்து வரும் காவிரி வளத்தையுடைய வேளாளரது கொழுவின் ஆணியினாலன்றி இந்த வுலகம் சிறப்புற்று இருக்காது.

## 14. நாற்றுக் கோலி

கோபத்திற்குக் காரணமான வறுமையை வென்ற வேளாளரது வயலிலே, பயிர்களின் நாற்றுமுடி செழித்திருக்குமானால் அரசனது முடி செம்மை பெறும். ஒரு பாற் கோடாமல் அரசர்கள் செங்கோல் நடத்துவதும் வேளாளரது ஏரடிக்கும் சிறுகோலே. ('பசி வந்திடப்

பத்தும் பறந்துபோம்' என்பர்கள். நாட்டில் நீதி நிலை பெற மக்கள் பசியின்றி வாழவேண்டும். பசிதீர உண்டவர் தீவினைகளைச் செய்ய முற்படார். எனவே அரசர் செங்கோலும் வேளாளரது தாற்றுக் கோலின் பெருமையின தாகும்.)

## 15. உழவெருதின் சிறப்பு

மழை பெய்யினும், பெய்யாதாயினும், மக்களுக்கு வள மேற்படுவது எவராலே! அந்தணரது யாகம் நலம் பெறு வது, யானைகள் மதம் அடைதல் எல்லாம் உழவெருது களின் வலிமையால்தான். (யானையும் சாற்றைக் காவிய மாகக் கொள்ளக் கூடியது.)

## 16. உழவெருதின் சுவற்கரைச் சிறப்பு

(சுவற்கரை—எருதின் பிடரியில் நுகத்தடி அழுந்துவ தாலான தழும்பு.)

சிவபெருமானது கண்டத்தில் படிந்த கறை தேவர் களை அமுதூட்டச் செய்த கறை. பெருமைமிக்க வேளாளரது எருதின் பிடரியில் அழுந்திய தழும்போ உலகத் தாரையும், தேவரையும் உணவூட்டத் தோன்றிய கறை யாகும். (தேவரை மட்டும் அமுதூட்டச் செய்த கறை யிலும் உலக மக்களையும் தேவரையும் உணவூட்டச் செய்த கறை சிறப்புடைத் தென்பதாம்).

## 17. பகடு பூட்டற் சிறப்பு

பகடு—எருது—எருமைக்கிடாய் (ஆண்மைப் பெயர்)

உணவுப் பொருட்களை உண்டாக்கி மக்களை ஊட்டு கின்ற பெருமை வேறொருவர்க்கும் இல்லை. உணவு உற் பத்திக்குக் காரணமான பகட்டை ஏரில் பூட்டுவாரின் புகழே மேலானது. வெற்றித் தூண் நாட்ட விரும்பும் மன்னனையும் வேளாளர்க்கு நிகராகக் கூறுவோர் யார்? இல்லை எனலாம்.

### 18. ஏர்பூட்டற் சிறப்பு

கைம்மாறு கருதாது கொடுக்கும் மேகத்தை ஒத்த வேளாளர்கள் தமது ஏரைப் பூட்டின் அல்லால் திசை யானைகளும் உலக பாரத்தைச் சுமக்க மாட்டா. பிறரைத் தன் வயப்படுத்தும் ஆற்றலுடைய மன்மதனும் தனது வில்லில் அம்பு பூட்டமாட்டான். சூரியனும் தனது தேரைப் பூட்ட மாட்டான்.

உலக நிலைபேற்றிற்கு ஏர் இன்றியமையாதது.

### 19. ஏர் நடத்தற் சிறப்பு

தவறாமல் மழை பெய்ய நாட்டில் நல்லொழுக்கம் மிக்க வேளாளரது ஏர் நடக்குமாயின் நாட்டில் இயலிசை நாடகம் நடக்கும், பல்வேறு சிறப்புகள் நடக்கும், படை பலம் குன்றாது, தருமம் தவறாமல் நடக்கும், உலகில் உயிர்கள் தோன்றும், பசி மக்களை நலிவிக்காது.

### 20. உழுநர் சிறப்பு

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாரும் தொழுதுண்டு பின் செல்பவர் என்பது எழுதப்பட்ட வேத மாகிய திருக்குறளின் கருத்து. உலகில் வேளாளராகப் பிறந் தோர்க்கு இதனினும் பெருமை தரத்தக்கது எது?

### 21. உழவின் சிறப்பு

உழவுத் தொழிலினால் வேதங்களின் பொருளும் விளங்கும், யாகங்கள் மேன்மையடையும், கலைகளின் தொகுதி விளக்கமுறும், புலவர்தம் செய்யுள் மேன்மை யுறும். திருமகள் விளக்கமடைவாள், நீதி தவறாது விளங் கும், உலகம் ஒளி பெறும்.

### 22. படைச்சாலின் சிறப்பு

படைச்சால்—கலப்பை உழுத சுவடு.

பழமறையோர் யாகம் செய்வதற்கு உழுது சால்வது (தரை உழுது) அமைவதாகிய கலப்பைதான் உயர்வானது

என்று நூல்கள் கூறுமானால், அக் கலப்பையைப் பெற்றுள்ள வேளாளர் உழுவதனாலேற்பட்ட அப்படைச் சாலின் வழியால் இல்லாமல் இவ்வுலகத்தவர் உய்யும் வழி அறிய மாட்டார்கள்.

## 23. மண்வெட்டிச் சிறப்பு

பழைய நிலத்து வேளாளர்களின் பெரிய கையினிடத்தாகிய மண்வெட்டிக் கருவி—வறுமையைப் போக்கி அவர்களது கைகளைவிட்டு நீங்காது. அவருக்குத் துணையாக நிலமகளும், கலைமகளும், வெற்றிச் செல்வியும் முன் வந்து நிற்பர். (கொட்டுக் கொண்டு நிலத்தைத் திருத்த முதுநிலத்தில் உறையும் மூதேவி தொலைய மற்றையோர் முன் நிற்பர்.)

## 24. வரம்பு கோலுதற் சிறப்பு

(வரம்பு கோலுதல்—அண்டை வெட்டுதல்)

உடம்பை எல்லையாகக் கொண்ட உலகில் ஒழுக்க வரம்பும், வேத நூலிற் கூறியுள்ள வைதிக ஒழுக்க வரம்பும் வரம்பாகுமா? ஆகா. பொய்மையே இல்லாத பூமிதேவியின் மக்களாகிய உழவர் கழனியின் வரம்பைச் செம்மையுறச் செய்யாராயின் எட்டுத் திசையிலும் உள்ள உயிர்களும் செம்மையுற்றிருக்கா. (வரம்பு—எல்லை)

## 25. எருக் கூடைச் சிறப்பு

மண் வெட்டியால் பூமியைத் துன்பப்படுத்தி (படுத்து) ஆழ இறக்கி மண்ணை மேல் கீழாகத் திரிய வைத்துத் துன்புறுத்திய வேளாளர் தங்கள் எருக் கூடையை இறக்கும் போது அவளை வணங்க வில்லையானால் தங்களது பாவச் செயலை நீக்க முடியாதவராவர். (நிலம் தன்னை வருத்தமுறச் செய்தவர்கட்கும் அருளும் தன்மையுடையது.)

## 26. சேறு செய்தற் சிறப்பு

உண்மைத் தன்மையுடைய வேளாளர் வெறுப்பது பொய்மையை, மனத்தால் தண்டிப்பது வறுமையை, வயலில் அழிக்கப் பார்ப்பது புல்லையே, நிலத்தின் வளம் அறிந்து தடுத்து வைப்பதெல்லாம் சேற்றினையே. (சேறு நன்றாக இருந்தால்தான் பயிர் தழைத்தோங்கும்.)

## 27. பரம்படித்தற் சிறப்பு

பரம்படித்தல்—நிலத்தைச் சமனாக்குதல்.

கரைகள்தோறும் மாறியையும் பொன்னையும் கொழிக்கக்கூடிய காவிரி நாட்டு வேளாளர் நீர் வரப்புகளில் சென்று பாயும்படி பரம்படிக்கும் போது மண் கட்டிகள் உடைந்து உரமாவதன்றி வேறொன்றாகுமோ? நிலத்தில் பலகை கொண்டு பரம்படித்தலினால் நிலம் சமனாகி நீர் தேங்க வுதவும், மண்கட்டிகள் உடைந்து சேறாகி வளம் செய்யும்.

## 28. வித்து விளைத்தற் சிறப்பு

பக்தி நெறியைத் தோற்றுவிக்கும் தெய்வத்தை வணங்குவார்க்கும், முத்தியை அடைய விரும்பும் ஞானிகளுக்கும் இனிய சோற்றை உண்பித்து அறம் வளர்ப்பார்க்கும் வல்லமை பெற்ற மற்றையோருக்கும் வேளாளர் வித்து (விதை) விளைக்காவிடில் அவரவர்கள் வேண்டுவன அடையப் பெற மாட்டாது.

## 29. முளையின் சிறப்பு

வேளாளரது வயலில் முளை மயங்காமல் நன்கு வளரப் பெறுமானால், வரிக் கொடுமையின்றி மன்னரது ஆட்சித் தன்மை நிலைத்திருக்கும். அந்தணர்கள் வேதம் ஓதுவ தொழியார், மனு நீதி தவறாது. (முளை நன்கு இருந்தால் பயிர் செழித்து வளரும். பசியின்றி வாழ்ந்தால் மக்கள் தீ நெறியிற் புகார்).

## 30. நாற்றங்காற் சிறப்பு

இடியேற்றினைத் தன்னிடத்துக் கொண்ட நீருடை மேகமும் கைம்மாறு கருதாமல் உயிர்களைப் பாதுகாக்கின்ற சிறப்புடையது எனக் கூறினாலும் அம்மழை நீராற் பெருகுகின்ற நதி கடலைத்தான் வளர்த்திடும். உலக உயிர்களை வளர்ப்பன வென்று கூறப்படுபவை வேறு பொருட்கள் கிடக்கட்டும், வேளாளரது வயலில் நாறு வளர்ந்திடில் அன்றி உலகத்துயிர்கள் வளரமாட்டா.

## 31. நாறு பறித்தற் சிறப்பு

சனி மீன ராசியில் புகினும், வெள்ளி தென் திசையின் கண்ணே செலினும் என்ன? குறித்த நாளின் எல்லை கூட வந்து பெருக்கெடுத்து வரும் காவிரியாற் சிறந்த சோழ நாட்டு வேளாளர் வளப்பமுடைய வயலிலுள்ள நாற்றைப் பிடுங்க மீண்டும் நாள் குறித்துக் கொண்ட பிறகு உலகத்துயிர்கள் பசித்திராது. (மீனம் 12 பூராசி அதில் சனி புகுந்தால் தீமை ஏற்படும். வெள்ளி மீன் திசை மாறித் தெற்கே சென்றால் மழை பொழியாது என்பது கருதத் தக்கது).

''வசையில் புகழ் வயங்கு வெண் மீண்
திசை திரிந்து தெற்கேகினும்....

வான் பொய்ப்பினும் தான் பொய்யா
மலைத் தலைய கடற் காவிரி'' (பட்டினப்பாலை)

## 32. நாற்றுமுடி சுமந்த சிறப்பு

நவமணிகளையும் ஆணிப் பொன்னில் அமைத்து வேலைப்பாட்டுடன் செய்த மன்னர்களது முடியும் சிறந்த முடியாகுமா? வேளாளர் பசுமையான நாற்றுமுடிகளைத் தம் தலையில் சுமக்காவிடில் அரசர்களது செங்கோல் மிகத் தொலைவிலுள்ள நாடுகளுக்கும், பல்வேறு திசைகளுக்கும் செல்ல மாட்டாது.

### 33. வயலில் முடி சேர்த்தற் சிறப்பு

வேளாளர் வயலிலே நடுமாறு சேர்க்கின்ற நாற்று முடியை ஆதாரமாகக் கொண்டல்லவா மூவேந்தரது முடியும், கொடையில் மேம்பட்ட கண்ணன் முடியும், மற்றும் கூறப்படுகின்ற முடிகள் எல்லாம் நிலைபெறும். (முடி— நாற்றுமுடி - அரசர் தலையில் சூடிக் கொள்ளும் கிரீடம்).

### 34. முடி விளம்புதற் சிறப்பு

(விளம்புதல் - நாற்று முடியை ஆங்காங்கே நடுமாறு வீசியெறிதல்).

வறுமையின் வலிமையைத் தொலைக்கவல்ல நாற்றங்காலிலிருந்து பறித்துக்கொண்டு வந்த நாற்று முடிகளை விளம்பாரானால், அந்தணர் வேதம் ஓத மாட்டார்; மன்னர் நீதி தவறாது ஆட்சி செய்ய மாட்டார்; புலவர் நல்ல நூல்களை இயற்ற மாட்டார். மற்றும் சொல்ல வேண்டுவன ஏதாகிலும் உண்டோ? இல்லை என்றவாறு.

### 35. கைப்பாங்கின் சிறப்பு

நாற்று நடுவதிற் கைப்பழக்கத்தாலான சிறப்பு. இறைவனின் தன்மைகளை உணருமாறு கூறுகின்ற வேத நூல்களைக் கற்பதனாலும் பொய்ம்மை விளங்க அயலாரைப் புகழும் நூல்களைக் கற்பதனாலும் என்ன பயன்? வயலிலே விளைந்த வளப்பமுடைய செந்நெல்லின் சிறந்த நாற்றைக் கைத்திறமையாலே பிரித்து நடுவதற்குக் கற்றவர்களே உலகம் பயன் பெறும் வழியைக் கற்றவராவர். (கற்பதின் பயன் பிறர்க்குதவி செய்தற்கேயாம்).

### 36. நடவுமுனைச் சிறப்பு

(ஒரு பக்கம் உழ ஒரு பக்கம் நாற்று நட இரண்டும் சேர்ந்து நிகழும் இடம்).

அரசர்கள் யானையின் மீதேறி பகைவரை அழிக்கும் போர் முனையும் ஒரு முனை ஆகுமோ? கடாக்களை வயலில் செலுத்தி உழுது, ஒரு புறம் சேறாக்க ஒரு புறம் நாற்று முடிகளை நடுகின்ற அவையல்லவா சிறந்த முனை என்று சொல்லப்படுவது. (அரசரது போர் முனையை விட வேளாளரது நடவுமுனைச் சிறப்புடைத்து).

## 37. பயிர் விளைத்தற் சிறப்பு

(பயிரை நன்கு விளையுமாறு செய்யும் தொழிலின் சிறப்பு)

ஏரைக் கொண்டு உழுவதால் சேறாக்கி எரு விடுதலால் கருவேறச் செய்து, நீரை உரிய காலங்களில் பாய்ச்சுவதால் பயிரைப் பசுமையாக வளர்க்கும் வேளாளரையன்றி வேறு யாரால் மக்கள் பசி தீர்க்கப் பெறுவார்? மழையினாலோ அல்லது காவிரி நதியினாலா?—(மழையும், காவிரி நதியும் மட்டும்பசி தீர்க்க வல்லன அல்ல).

## 38. பயிர் முளைத்தற் சிறப்பு

அந்தணர்க்கு முதன்மையானது வேதம். அரசர்களுக்கு முதன்மையானது வெற்றி; வணிகருக்கு ஆதாயம் பெருக்கக் காரணமானது மூலதனம். உலகில் பிறந்த உயிர்களுக் கெல்லாம் மருந்தாக வைத்துள்ள மூலமோ வேளாளரது வயலின்கண்ணே உள்ள பயிர் முதலேயாம். (சோற்றினை ஆருயிர் மருந்து எனக் கூறுவர் மணிமேகலை ஆசிரியர். உண்டி முதற்றே உறைவின் பிண்டம் என்பது புறநானூறு.)

## 39. பயிர் வளர்த்தற் சிறப்பு

பெரும் புகழ் படைத்த வேளாளரின் பயிர் வளருகின்ற திறத்தாலே, சிறப்பான வேதம் வளரும், அரசரது முடி உயரும், வாணிபர்க்கு நிதிபெருகும், கல்வி, கேள்வி முதலிய செல்வமும் செழித்தோங்கும்.

## 40. ஏற்றத்தின் சிறப்பு

காற்றின் அசைவினால் வானத்தில் இயங்கும் மேகம் மழை பெய்யாவிடினும், கடல் வற்றி ஆற்று நீரும் வற்றி விடுமாறு சுக்கிரன் (வெள்ளி) தான் இயங்கும் திசையில் லாத தெற்கின்கண் செலினும், ஏற்றத்தினைக் கருவியாகக் கொண்டு நீரை இறைத்தேனும் பயிரைப் பாதுகாத்து, உலகத்துயிர்களைப் பாதுகாத்தல் காராளர்தம் கடமை யாகும்.

## 41. துலை நீரின் சிறப்பு

(துலாக்கோல்—ஏற்றத்தின் நடுவில் பொருத்தப்பட்ட மரம். அதில் ஒரு பக்கம் தண்ணீர் இறைக்கும் சால் இணைக்கப்படும்.)

ஏற்றத்தால் பாயும் நீரின் சிறப்பு. அறுபத்தி நான்கு கலைகளில் வல்ல அந்தணர்கள் முந்திக் கொண்டு யாகம் வளர்த்தலும், அரசர்கள் முடி புனைந்து கொள்வதும், வணிகர் பொருளீட்டுவதும், சொன்ன சொல் தவறாது நிலை பெற்ற வேளாளர் ஏற்றத்தினால் பாய்ச்சிய நீராலே ஆகும்.

## 42. கரம்பு திருத்தல்

(கரம்பு—சாகுபடி செய்யப்படாத நிலம். அது புன் செய், மானாவரி என இரு வகை.)

சிறு திடர்களையும் காடுகளையும் அழித்து, வரப் பினைத் திருத்தமுற அமைத்து கரம்பினை மிகவும் வளப்ப முறச் செய்து உலகியலொழுக்க முறைமையை மேற் கொண்ட வேளாளர் காவாமலிருந்தால், பகைவர்களை அழிக்கும் வேந்தர்கள் எவற்றாலும் கரம்பினைத் திருத்தி தாங்கற்கரிய வறுமையை ஒழிக்க மாட்டார்கள்.

## 43. புழுதிச் சிறப்பு

(பயிர்த் தொழில் விதை விதைத்தல், நாற்று நடுதல் என இருவகைப்படும். விதை விதைக்க மண்ணைப் பல முறை உழுது புழுதியாக்க வேண்டும். 'தொடிப் புழுதி கஃசா உணக்கின்' என வள்ளுவர் கூறுகின்றார்.)

நெல் விளைவிக்கப்படும் புழுதிக் காலினால் வேதம் முத்தமிழ் ஏற்றம் பெறும், நீதி நிலை பெறும், அரசரது முடி ஏற்றம் பெறும். ஈரமில்லாமற் செய்து உழவர் மடித்து மடித்து உழுத புழுதிக்காலால் விளையாத பொருள்களே இல்லையெனலாம்.

## 44. பைங்கூழ்ச் சிறப்பு

வறுமையால், நுகரும் பொருளின்றிக் கெட்டவரைத் தாங்குதலால் அழிவு படாத உழுகுலத்திற் பிறந்தவரும், எவரையும் பகைவரென்று நீக்காத சிறந்த குணத்தை யுடையவருமான வேளாளர், ஞானிகளுக்கும் பசி நீங்கும் படி பசிய பயிரை நட்டவரும் உலகத்தாருக்கு நன்மை ஏற்படும்படி நிலை நிறுத்தியவருமாவார்.

## 45. பயிருக்குத் தண்ணீர் பாய்ச்சுதல் சிறப்பு

மழை பெய்வதால் பெருகி வருகின்ற காவிரி நதியைப் பயனுள்ளதாகச் செய்யவல்ல, உழவுத் தொழிலை மேற் கொள்பவரான வேளாளர், உலகத்தால் தாங்கப் பெறும் பல உயிர்களின் பசியைப் போக்கிப் பாதுகாக்க வல்ல பசுமையான பயிருக்கு வேண்டிய நீரை உரிய காலத்தில் பாய்ச்சுவதால் அவரே இந்நில வுலகத்தைத் தாங்குபவரா வார்.

## 46. களை களைதற் சிறப்பு

சங்கு, மணிகள், மலர், பலாச்சுளை முதலியனவற்றை அடித்துக் கொண்டு வந்து கரையில் ஒதுக்கும் காவிரி பாயப் பெற்ற சோழநாட்டை வாழிடமாகக்கொண்ட வேளாளர்,

செந் நெற்பயிர் வேரூன்றி, கிளை பிரிந்து வளரும்படி களை பிடுங்கி எறியாவிடில் அரசர்கள் உலகத்திற் தோன்றும் வறுமையைக் களைய இயலாது.

"வெள்ளக் களைகளைந்து வீறும் பயிர்தழைக்கக்
கள்ளக் களைகளைந்த கற்பகக் கை"

—திருக்கை வழக்கம்

## 47. கருப்பிடித்தற் சிறப்பு

(பயிர்க் கதிரில் பால் பிடித்தல் கருப்பிடித்தல் எனப் படும்.)

கற்பக மரத்தை யொத்த கொடையினை மேற் கொண்ட வேளாளரது குளிர்ந்த வயலிலே நெற்பயிர் கருவைக் கொள்ளுமாயின் யாவர்க்கும் செல்வம் தோன்றும், உடல் வலிமை உண்டாகும், வடிவழகு ஏற்படும், மேன்மை பெருகும், உலகத் துயிர்கள் சிறப்புறும், பூமியில் வறுமை தலை காட்டாது.

## 48. ஈற்றேறுஞ் சிறப்பு

(கதிரில் பிடித்தபால் முற்றி அரிசி வடிவமாதல்)

காவிரியின் வளம் பெற்ற சோழ நாட்டு வேளாளர் பயிரிட்ட நெல் ஈற்றெறுகையில்— சிவபெருமானது கோயில் திருவிழாக்கள் சிறப்பாக நடக்கும், வேள்விகள் வளர்த்தப் பெறும், மன்னரது செங்கோல் சிறப்புறும், உலக மக்கள் வளம் பெறுவர், வறுமையகலும்.

## 49. பசுங்கதிர்ச் சிறப்பு

முதிராத காலத்திலும் முற்றிய பருவத்திலும் கதிரென்று சொல்லப் படுவதாகி உயிர்களை வளரச் செய்வது வேளாளர் வளரச் செய்கின்ற நெற்கதிரல்லவா? ஆகாயத்தில் வருகின்ற எரிக்கும் தன்மையுடைய சூரியனும் குளிர்ந்த தன்மையுடைய சந்திரனும் கதிர் என்று சொல்லப் பட்டு உலகத் துயிர்களை வளர்ப்பது உண்டாயின் காட்டுங் கள். எனவே கதிரில் சிறந்தது நெற் கதிரே.

### 50. நெற்குலை வளைதற் சிறப்பு

வேளாளரது குளிர்ந்த வயலிலே நெற்பயிரின் கதிர்க் குலையானது நன்கு முதிர்ந்து, தலைமடங்கி விழும்போது; அரசர்கள் கையிலேந்திய வில் வளையும், மன்மதனது கரும்பு வில்லும் வளையும், வறுமையின் தலையும் வளையும். ஆனால் மன்னரது செங்கோல் வளையாது. (மன்னரது செங்கோல் வளையாதிருக்க வேளாளரது நெற்குலை இன்றியமையாதது.)

### 51. சோறிடுஞ் சிறப்பு

(காவல் காத்தற் சிறப்பு)

(விளைந்த பயிருக்குக் கள்வர், புள், விலங்கு முதலிய வற்றால் அழிவு நேரிடாமற் காத்தல்) தீவினைக்குக் காரண மான வறுமையின் வலியை ஒடுக்கிய வேளாளர், உடலை வளர்க்கின்ற சோற்றினைப் பரிமாறி, அவர்களது வயலை அழிக்க வருகின்ற கள்வர், விலங்கு, புள் முதலியவற்றை விரட்டும்படி காவல் காக்கத் தொடங்கினாரானால், அறம் விளக்கமுறும், புகழ் ஓங்கும், வேதாகமப் பொருள் கூறு பாடு அடையும், வெற்றியினையும் அழகினையும் வளர்க் கின்ற செல்வமும் உண்டாகும்.

புறங்காணுதல்—1. கடமையைச்செய்தல்
2. முதுகு காளை விரட்டுதல்.

### 52. அரிகதிர் வழங்குஞ் சிறப்பு

(அரி கதிர்—நெற்கதிர் கைப்பிடிக்கதிர். இதனை வறிய வர்களுக்கு வழங்கும் சிறப்பு.)

உரிவுண்ட—அரிபட்ட

உலர்க்கு—வறியவர்க்கு.

வறியவருக்குக் கொடுத்த நெற்கதிர் தங்கக் கதிருக்கு நிகராகும் என்ற பெருமையான மொழி புதிதாக வழங்கப் பட்டதன்று, பழமொழியானதே. கடல் நீரையுண்டு

மேகங்கள் மழை பெய்ய மறுத்தாலும் வேளாளர்களின் உபகாரச் செயலினுக்கு மாறுபாடும் உண்டோ? இல்லையென்பதாகும்.

53. அரி சூட்டின் சிறப்பு

(அறுக்கப்பட்ட நெல்லரிக் கட்டு அரி சூடு எனப்படும்)

கரையோரங்களில் சங்குகள் உலவப் பெற்ற காவிரி நதி பாயும் சோழ நாட்டில் நில மடந்தையின் சிறந்த மக்களாகிய வேளாளர் கழனிகளில் பிறைவடிவாயுள்ள அரிவாளால் அறுத்துச் சேர்க்கப்பட்ட அரிச் சூடு வரப்பினின்று களத்திற்குச் செல்லாதெனின், உலகில் ஒழுக்கம் நிலவாது.

54. களஞ் செய்தற் சிறப்பு

(அரிந்த நெல்லரிக் கட்டுக்களை வைத்தடுக்க, நெல்லடிக்க, கடாவிடச் செப்பனிடப்படும் நிலம் களம் எனப்படும்.)

வேந்தர் படை நடத்திச் செல்வதும், நீதி நிலைபெற்றிருத்தலும், தமது குல ஒழுக்கப்படி பயிரிட்டு, நீர்ப் பாய்ந்து வயல் விளைக்கச் செய்கின்ற வேளாளர் வயலிடத்துக் களம் சமைக்கும் தன்மையால் ஆகும்.

55. படு சூட்டின் சிறப்பு

(சூட்டை ஒன்றன் மேல் ஒன்றாகப் படுப்பது.)

மலர்களை அம்பாகக் கொண்ட மன்மதன் வலிமை பெறுவதும், மாளிகைகளும் கோபுரங்களும் பொற் கவசங்கள் அணிவதும், வெற்றியுடைய அரசர் முடி சூடி மூவுலகம் வணங்கப் புகழ் பெற்றிருப்பதும் வேளாளர் அடுக்கிய நெல்வரிக் கட்டினால் தோன்றிய வலிமையால் ஆகும்.

56. அரிமிதி கோலின் சிறப்பு

(நெல்லரிக் கட்டை அவிழ்த்துக் கைக் கொண்ட அளவாக வகுத்து அடித்தபின் அதில் தங்கியிருக்கும் நெல்

உதிரும்படி, தடியால் அடித்தல். அத்தடி அரிமிதிக் கோல் எனப்படும்.)

மன்னர்கள் பகைவரை வென்று, முறை செய்து செலுத்துகின்ற செங்கோலாவதும், வறுமையை ஒழிக்கும் கோலாவதும் யாதெனில் நெல்லின் சூட்டினை அடித்து மிதித்திடும் கோலேயாகும்.

## 57. போர் செய்தற் சிறப்பு

(நெல்லுடன் கூடிய வைக்கோலைப் போராக்குதல்)

புகழ்மிக்க ஏர்த் தொழிலை மேற்கொண்ட காவிரி பாயும் சோழ நாட்டு உழவர்கள் செய்கின்ற நெற் போரினால், நால்வகைப் படை நடத்திப் போர் செய்யும் மன்னரது போர்க்கோலம் எப்போதும் மேன்மை பெறும்.

## 58. போர்க்களம் பாடுதற் சிறப்பு

புலவரால் பாடப்படும் புகழையுடைய அரசர்களது போர்க்களத்தைப் பாடுவதனாற் பெறப்படும் பெருஞ் செல்வம் இவ்வுலகில் சிறந்ததாகாது. பின் எது சிறந்த தெனில் குவளை மலர் மாலை யணிந்த அகன்ற மார்பை யுடைய, எப்போதும் முயற்சியை உடைய நெற் போர்க் களத்தைப் பாடுவதால் பெறுகின்ற செல்வமே இவ்வுலகில் சிறந்தது. (தளம்: தாளாண்மை—தாள் + ஆளர் = தாளாளர்.)

## 59. போர்க்களச் சிறப்பு

ஏரைக் கொண்டு தொழில் புரியும் வேளாளரது பெருஞ் செல்வமாகிய நெல், கெடுதலின்றி மிகுதியாக விளைந்திருப்பதனால், மன்னரது செல்வம் ஒருபோதும் தாழ்ச்சியுறாது. பகைவரோடு செய்யும் போர்க்களத்தில் சிலர் வெல்வார்கள்; சிலர் தோற்பார்கள்; ஏர் வேந்தராகிய வேளாளரது போர்க்களத்தில் யாசிப்பவரும் தோல்வியடைய மாட்டார்கள்.

## 60. போர் செய்வோர் நெல்லரிவாரை விளித்தற் சிறப்பு

நாவலோ! நாவலோ! என நாட்டிலுள்ள யாவரும் அறியும்படி உரத்துக் கூறி அழைக்கும் பணியாளரோடு நெற்களத்தில் புலவர்களும், அசைவாளரும், அரசர்களும் ஆகிய யாவரும் அவ்வேளாளர் தருவதைத் தாம் பெறும் பொருட்டு அவர் முன் நிற்பர். (திறைப் பொருட்டு அரசனும் வந்து நிற்பான் என்றவாறு)

நாவலோ என்பது பணியாளரைக் கூவி அழைப்பதோர் குறிப்பு.

''காவல் உழவர் களத்தகத்துப் போரேறி
நாவலோ என்ற ழைக்கும் நாளோத''

என முத்தொள்ளாயிரம் கூறும்.

## 61. போர் படுத்தற் சிறப்பு

(வைக்கோற் போரை வாங்க விட்டு பகட்டால் மிதிப் பித்து உதிர்ந்த நெல்லைப் பிரித்தெடுப்பது.)

மன்னர்கள் போர்க்களத்தில் யானைகளைச் செலுத்திப் பகைவரைக் கொன்று, பயன்பெற்று இவ் வுலகத்தைப் பாதுகாத்து வாழ்வதெல்லாம் உழவர் பகடு களை (கடாக்களை) விட்டு மிதிக்கச் செய்து பின் அடுக்கி யிட்ட வைக்கோற் போரின் மிகுதித் தன்மையால் ஆகும்.

## 62. நெற் பொலிச் சிறப்பு

ஒளியும், புகழும் உடைய வேளாளரின் வயலிலே நெல்லின் குப்பை உளதாகுமானால் பூமிதேவியும், சீதேவி யும் விளக்கமடைவர். உலகத்தில் உறைவின் மிகுதி யுண்டாகும். புரளாது கவியும் பொலிவு பெறும், வறுமை யின் தொல்லை இருக்காது.

## 63. நெற்குவித்தற் சிறப்பு

தம்முயற்சியால் உலகத்தை வளர்க்கும் உவமை கூற முடியாத வேளாளர், நெற்களத்திலே காற்றின் உதவியால் தூற்றியிடும் செந்நெல்லின் தோற்றத்தைத் துவண்டோர், இது பொன்மயமான மேரு மலையோ என வியந்து கூறுவர். வேளாளர் அந் நெல்லின் குவியலால் உலகத்துயிர் களைப் பாதுகாப்பர்.

## 64. கூடைச் சிறப்பு

பல்வேறு ஆடை ஆபரணங்களையும் அரச முடியினை யும் தரித்திருத்தலும், யானை மீதமர்ந்து உலகம் காத்த லும், பெண் அன்னத்தினோடு ஆண் அன்னம் விட்டு நீங்காது தங்கப் பெற்ற கழனிகளையுடைய கூடையிலே கூடையை ஏந்தி களத்தில் புகுந்தால்தான் இயலும்.

## 65. பொலி தூற்றுங் கூடைச் சிறப்பு

கடலொலி தங்கிய இப்பெரிய உலகில், தாம் நல்வாழ்வு பெறப்பகைவரை அடக்க வல்ல அரசர்க்கும்,அந்தணர்க்கும், முனிவர்களுக்கும் சோற்றை உதவுகின்ற கூடை, பசியைப் போக்கிப்`புகழைத் தாங்கிய வேளாளரது கூடையல்லவா? அதற்கு ஒப்பாகிய கூடை உள்ளதா கூறுங்கள்.

## 66. பொலி கோலின் சிறப்பு

(நெற்குவியலில் முத்திரையிடுங் கோல்)

வெற்றி பொருந்திய அரசர்க்கும் எல்லாப் பொருளை யும் கொடுத்து உலக மக்களைப் பாதுகாக்கின்ற புகழும், செல்வமும் உடையவரான வேளாளரின் கையிலேயுள்ள நெற்பொலிக்கு முத்திரை யிடுங்கோல் கொடிய வறுமையை அழிக்கும் கோலாகும்; மனு நீதி அழியாமல் அறம் தழைக்கச் செய்யுங்கோலும் அதுவேயாகும்.

ஊற்றம்—வலிமை

## 67. விரைக் கோட்டைச் சிறப்பு

(நெல் விதையை வைத்து அவற்றைப் பொதிந்து கட்டுவது)

பிரம தேவனால் படைக்கப்படுகின்ற உயிர்களின் வறுமையைக் கோபித்து ஓட்டுகின்ற புகழுக்கும் உரிமை உடையவராகி முறைமையை வளர்க்கின்ற, மலை போலும் தோள்களையுடைய சோணாட்டு வேளாளரின் விதைக் கோட்டையைக் கொண்டு அல்லவா அரசர் கட்டியுள்ள கோட்டைகள் நிலை பெற்றுள்ளன.

## 68. கல்லறை சிறப்பு

(கல்லறை—கடாவிட்டுக் கல்வி அறைபடுதலால் பெற்ற நெல் மணிகளைக் கட்டுதல்).

முயற்சியும், எட்டுத்திக்கிலும் பரவின புகழையும் உடைய வேளாளர், அரசர் அந்தணர் மற்ற எல்லோருக்கும் நெல்லை அளந்து கொடுத்த பின்பு, கடாவிட்டு உழக்கித் துவைத்தலால் சிந்திய கல் போன்ற நெல் மணிகளைச் சமைத்து உண்பார்களேயானால், அவரது உபகாரத் தன்மையை (ஒப்புரவினை) வரையறுத்துச் சொல்லக் கூடியவர் யார்? இல்லை யென்றவாறு. "வித்தும் இடல் வேண்டும் கொல்லோ விருந்தோம்பி மிச்சில் மிசைவான் புலம்''—எனும் வள்ளுவர் வாக்கு ஒப்பு நோக்கத் தக்கது.

## 69. மெய்ப்பேறு

(மெய்ப்பேறு—உண்மையான சிறப்பு)

அரியாசனத்து அமர்ந்து தனது குடை நிழலால் அரசு புரிகின்ற மன்னரிடம் பெரும் செல்வமும் புகழுடைச் செல்வமாகாது. ஏனெனில் நெல்லைச் சிலர் கொணர்ந்து கொட்டவும், சிலர் முகந்து தூற்றி நிற்பவும், சிலர் மொண் டளந்து குவிக்கவும் பெறுகின்ற வேளாளரின் பேற்றினுக்கு அவ்வரசரின் பேறு ஒப்பாதற்குப் போதிய பெருமை யுளதாகாது.

## 70. வாழ்த்து

உலகம் வாழ்க! வேதங்களில் வல்ல அந்தணர்தம் வேள்வியாகுதிகள் வாழ்க! சோழ நாட்டில் பாயும் காவிரீ வாழ்க! வேளாளரின் புகழ் வாழ்க! சுற்றம் வாழ்க! அவர்களின் ஏர் வாழச் சோழப்பேரரசின் ஆட்சிக்குட்பட்ட எழுபத்தொன்பது நாடுகளின் புகழ் வாழ்வதாகும்.

# திருக்கை வழக்கம்

## மூலமும் உரையும்

திருக்கை வழக்கம் என்பது வேளாண் பெருமக்களின் கொடைக் குணத்தைச் சிறப்பித்துக் கூறும் ஒரு நூலாகும். ஏனைய குணங்கள் சிறப்பிக்கப்பட்டிருப்பினும் பெரும் பான்மை நோக்கிக் கொடைக்குணம் விதந்தோதப்பட்டது என்க. திருக்கையினது வழக்கம் எனப் பொருள்படுதலின், ஆறாம் வேற்றுமைத் தொகை. 'திரு' என்பது மங்கலங் குறிப்பதோர் அடைமொழியாதலின், கையின் சிறப்பினைக் காட்டவந்தது. வழக்கம்—ஈகை; வழங்குதல் என்ற சொல்லினடியாய்ப் பிறந்தது.

இந்நூலை இயற்றியவர் கம்பர். வேளாளரைச் சிறப் பித்து ஏரெழுபது பாடியதையொட்டி உடனே, அதன் பின்பு இத்திருக்கை வழக்கத்தையும் பாடியுள்ளார்: இதனை "பாவலர்தாம், ஏரெழுபதோதி யரங்கேற்றுங் களரியிலே, காரிவிடநாகங் கடிக்குங்கை" என்று திருக்கை வழக்கத்தில் கூறியதால் தேற்றமா யுணரலாம், இந்நூல் சைவப்பற்றுடைமை தோன்றக் கூறப்பட்டுள்ளது சிலை யெழுபதுக்கு ஈட்டி யெழுபது போலே, [வேளாளர்] திருக்கை வழக்கத்துக்குத் [செங்குந்தர்] திருக்கை வழக்க மும் உண்டு. அதனைப் புகழேந்தி பாடினார் என்ப. இந்தத் திருக்கைவழக்கம் 59 கண்ணிகளைக் கொண்டு, வெண்டளையான் வந்த கலிவெண்பாவாகும்.

### நூல்

கங்கை குலந்தழைக்கக் காட்டும் பெருங்கீர்த்தி
மங்கை பிரியாமல் வாழுங்கை—திங்களணி

எம்பிரா னெம்பெருமா னிந்த்ராதி யர்க்கரிய
தம்பிரா னுக்குரைத்த சந்தனக்கை—யம்பொன்
வளைவாரி வையகமும் வானகமும் போற்ற
முளைவாரி வந்த முழுக்கை—இளைவாழக்
கச்சித் தலத்தரனைக் கல்லா லெறியமறந்
தெச்சிற் றயிர்ச்சோ றெறிந்திடுங்கை—பச்சைமிகு
தேமா வடுக்கமரிற் சிந்திற்றென் றேகழுத்தை
யாமா மெனவே யரிந்திடுங்கை—வாமமறை

ஓதுபுகழ் நாயனுட னூரன் புறகென்றே
மோதுதடி கொண்டு முடுக்குங்கை—தீதகல
அஞ்செழுத்தே யொன்றாகி யப்பரெனத் தோன்றியரன்
செஞ்சரணத் தேபூசை செய்யுங்கை—வஞ்சியர்பாற்
றூதரனைத் தான்விடுத்த சுந்தரனைக் காணாமற்
பேதமறத் தன்வயிறு பீறுங்கை—பூதத்தின்
மிக்க புலவனுக்கா வேசிமனை மட்டாகத்
தக்க சிவிகைகனை தாங்குங்கை—மைக்கடுவாய்
மூக்கிற் புகைபுரிந்த மூதரவின் வாயிடத்து
நீக்கியகை நாக்கதனி னீட்டுங்கை—யாக்கமுடன்

ஏதமற்ற கீர்த்தியைக்கொண் டேட்டகத்தி லேயடிமைச்
சாதனமிட் டேகொடுத்த தங்கக்கை—மேதினியிற்
சூலி முதுகிற் சுடச்சுடவப் போதுசமை
பாலடிசி றன்னைப் படைக்குங்கை—சாலவே
நாணந் தராம னடுங்காமற் கூசாமற்
பாணன் பிணத்தைப் பரிக்குங்கை—காணவே
தண்டமிழோன் றன்மனத்திற் சந்தேகந் தீரக்கூழ்
உண்டவயிற் றைப்பீறி யூற்றுங்கை—கண்டளவில்
நீலிதனக் கஞ்சி நின்றவணி கேசனுக்காக்
கோலி யபயங் கொடுக்குங்கை—யாலமெனும்

வன்னியிடை மூழ்கி வானோர் பழிகழுவிக்
கன்னிதனை யேமணந்த காட்சிக்கை—துன்னுமொரு
பேருலகை யெல்லாம் பிழைப்பிக்கு மோர்கொழுவின்

ருக்குத் தென் மேற்கே வேகவதி ஆற்றின்கரையில் இந்தத் திருப்பருத்திக் குன்றம் இருக்கிறது. இந்தியாவின் எல்லாப் பாகங்களிலிருந்தும் ஏராளமான ஜைன யாத்ரீகர்கள் இங்குள்ள ஸ்ரீமகாவீர வர்த்தமான ஸ்வாமியைத் தரிசிக்க வருகின்றனர். இங்ஙனம், சைன ஆலயங்களிற் சிறந்த இந்தத் திருப்பருத்திக் குன்றத்தில் சிவனாலயங்கள் கட்டினர் வேளாண்பெருமக்கள் என்று இக்கண்ணி கூறுகின்றது. 'சினனாலயங்கள்' என்று பாடமிருக்குமோ எனச் சங்கிப் பார்க்குமுன்பின் நோக்க ஈண்டைக்கு அப்பாடம் பொருந்துவதொன்றன்று எனலாம். சிலர் 'விருப்புடனே கட்டுவித்த' என இருத்தலால், வெறுப்பின்றிச் சினனாலயங்களையும் சைவவேளாளர் கட்டுவித்தனர் எனக் கொள்ளலாம் என்றும், அது சமய சமரசப் போக்கைக் காட்டுவதென்றும் கூறுப. பொருந்துமேற் கொள்க, [ஈண்டு, ராஜராஜ சோழன் நாகபட்டினத்துப் புத்த விஹார அமைப்புக்கு உதவியமை நினைக.] 'விருப்புடனே கட்டுவித்து வீறுங்கை' என்ற பாட முண்டு. அப்பாடத்தில் 'திருப்புகழை' என மேல் காய் முன் நிரை வருதலின் அது தகாது எனக்கூறி, 'மெய்க்கை' என்ற பாடங் கொண்டனர்; இனி, 'விருப்புடனே கட்டுவித்த வெங்கை' என்ற பாடங் கொள்ளின் சிறப்பதாக அடியேனுக்குத் தோன்றுகிறது. 'வெம்மை வேண்ட'லாதலின் 'வெங்கை' என்பது கூறியது கூறலாகாது. முன்னருள்ள 'விருப்புடனே' என்றதை வலியுறுத்திநின்றது; விதப்புக்கிளவி வேண்டியது விளைக்குமன்றோ. 'குன்றில்' என்பதைக் 'குன்றுசூழ' எனப் பொருள்காணல் இழுக்கன்று. மடத்திட்ட தீத்தழல் என்றவிடத்து மடப்புறம்பு குறித்தல் நோக்குக. (40)

—திருப்புகழை

எண்ணை யெழுத்தை யிசையை யிலக்கணத்தை
வண்மைபெற வுண்டாக்கும் வாகுளகை—

(கு-ரை.) எண் என்பது - தருக்க நூலுக்கும், எழுத்து என்பது - இலக்கண நூலுக்கும் பெயராம். (அதனை,

''எண்ணு மெழுத்துங் கண்ணிவை யாய்ந்திந் நூற்பயனைக், கண்ணுக காண்பார் நற்கதி'', காண்டலனுமானம் கதை யருத்தாபத்தியிவை, ஈண்டிசைத்த வெண்ணெனவே யெண்'', ''வழுப்பதத்தை வாக்கினுக்கு மாற்றி வரமாக்கும், எழுத்தெழுவாயைந்து மெழுத்து'' என்னும் பரமததிமிரபானுத்திருக்குறள்களாலுணர்க.) ''காணாதம் பாணிநீயஞ்ச ஸர்வசாஸ்த்ரோபகாரகம்'' என்னும் வடநூன் மேற்கோளாலும், தர்க்கவியாகரணங்கள் கற்கும் நூல்களெல்லாவற்றிற்கும் கருவியாதலை அறிக. இங்ஙன் தருக்கமே பிரதானமாக இருப்பதால், தருக்கத்தைக் கணிதத்திலடக்கி, எண் என்பது கணிதம் என்றார் பரிமேலழகர்.

''எண்-கணிதம்: அது - கருவியும், செய்கையும் என இருவகைப்படும்; அவை ஏரம்பம் முதலிய நூல்களுட் காண்க. எழுத்து எனவே, அதனோடு ஒற்றுமையுடைய சொல்லும் அடங்கிற்று. இவ்விருதிறமும் அறமுதற் பொருள்களைக் காண்டற்குக் கருவியாகலின் கண்ணெனப்பட்டன'' என்ற பரிமேலழகர் உரைக் கூற்று ஈண்டு நினைக்கத்தக்கது. எண்-ஆராய்ச்சி: முதனிலைத் தொழிற் பெயர்: இது ஆராய்தலையுடைய நூலுக்கு ஆகுபெயர். எழுதப்படுவது, எழுத்து; இதுவும்-அதனிலக்கணத்துக்கு ஆகு பெயராம். இசை-சங்கீதசாஸ்திரம். 'இலக்கணத்தை' என்றது-சங்கீதத்தின் லட்சணங்களை என்றபடி; என்னை? முன்னை 'எழுத்து' என்றது இயலிலக்கணங்களைக் குறித்தாகலின். இனி, 'எண்ணை எழுத்தை' என்றதால் இயற்றமிழையும், 'இசையை' என்றதால் இசைத்தமிழையும், 'இலக்கணத்தை' என்றதால் அழகுமிக்க நாடகத்தமிழையும் 'இலக்கணம்-அழகு] குறிப்பதாகக் கொண்டு முத்தமிழ்வித்தகரைப் போற்றுதலின் மூலம் அந்த முத்தமிழையும் உண்டாக்குகின்றனர் வேளாண்பிரபுக்கள் என்ற படியுமாம். இங்ஙன், எண் எழுபது இசை இலக்கணங்களை வளம் பெறவுண்டாக்குதலால் 'திருப்புகழை' உண்டாக்குகின்றனர் என்க.

திரு-மங்கலம் குறிப்பது. உயர்ந்த புகழல்லால் பொன்றாது நிற்பதொன்றில்லாகலின், அத்னை விளைவிக்கின்றனர் என்றார். அதனால் அவர் கை 'வாகுளகை' யாயிற்று. வாகு-ஒளி, ஒழுங்கு (Propriety), சாமர்த்தியம். உள-உள்ள. இடைக்குறை. வேளாளப்பிரபுக்கள் பல துறைப் புலவர் களையும் ஆதரித்து அன்னார் மூலம் நூற்றுறைகளைப் பெருக உண்டாக்கியமை பிரசித்தம். (41)

—பண்ணமைந்த
வேதமொரு நான்கினையு மிக்கதமிழ் நாலடியால்
ஓதியுரைத் தேகருணை யோங்குங்கை

(கு-ரை.) இது நம்மாழ்வாரைக் குறிப்பது. இவர் வேளாள வருணத்தினர். இவர் பாடியருளிய திருவிருத்தம், திருவாசிரியம், பெரியதிருவந்தாதி, திருவாய்மொழி என்ற நான்கு பிரபந்தங்களும் முறையே இருக்கு யஜுஸ் அதர் வணம் சாமம் என்ற நான்கு வேதங்களின் ஸாரார்த்தத்தை வெளியிடுவனவாம். இவற்றுள், திருவாய் மொழி, "ஓதும் குருகையர்கோன் யாழினிசை வேதத்தியல்", "இசை, கூட்டி வண்சடகோபன் சொல்லமை, பாட்டோ ராயிரம்" "பண்டலையிற் சொன்ன தமிழாயிரம்" "செயிரில் சொல்லிசை மாலையாயிரம்", "பண்கொளாயிரம்" என்று பலவாறு போற்றப்படுதலால் 'பண்ணமைந்த வேதம்' என விதந்தோதப் பட்டதெனலாம். திருவாசிரி யம் நாலடியிகப்பினும், மிகுதிபற்றி 'நாலடியால்' எனப் பட்டது, செட்டித்தெரு, கமுகந்தோட்டம் என்பதுபோல. 'ஓதி' என்ற சொல்லாற்றலால் நம்மாழ்வார் வாய் மொழி வேதமாயிற்றென்றபடி. அவர் ஓதியது பிரபந்தர் கருக்குழி யிற் புகாவண்ணங் காத்து ஈடேற்ற வாகலின் 'கருணை' என்றது, நிர்ஹேதுக கிருபையைக் காட்டிற்று. 'ஈன்றமுதல் தாய் சடகோபன்' என்ற பட்டர் அருள்வாக்கும் நோக்குக. இந்தக் கண்ணி கொண்டும் சடகோபரந்தாதி பாடியமை கொண்டும் கம்பரை வைணவரென்றே சாதிப்பாருளர். ஸ்ரீ ஆறுமுகநாவலர் பதிப்பு உட்பட எல்லா திருக்கை

வழக்கப் பதிப்புக்களிலும் இந்தக் கண்ணியிருப்ப, தொழுவூர் ஸ்ரீ வேலாயுத முதலியார் பதிப்பில் இக் கண்ணி விடுபட்டிருக்கிறது என்று திருமணம் செல்வகேசவராய முதலியார் குறித்துள்ளார். (42)

—பூதலத்திற்

பாவல னெச்சிற் படுமாங் கனியையெடுத்
தாவலுட னன்றா வருந்துகை—

(கு - ரை.) புலவனெச்சிற்படுத்திய மாங்கனியை வெறுப்பின்றி விருப்புடன் உண்டான் ஓர் வேளாண்மகன் என்றதால் புலவோரை மகிழ்விப்பதில் ஊற்றமும், அவர் போனகம் செய்த சேடம் புனிதமென்ற மனப்பண்பும் உடைமை பெறவைக்கப் பட்டது. இதன் விவரம் வந்தவழிக் காண்க. (43)

—காவலவன்

மண்ணிற் கடலின் மலையிற் பெரியதென
எண்ணியெழு திக்கொடுத்த வேற்றக்கை—

(கு - ரை.) இது வேளாளர் மரபிலுதித்த சேக்கிழார் பெருமானைப்பற்றியது. விவரம்:—ஒருநாள் சோழமன்னன் தன் சபையிலுள்ளோரைப் பார்த்து 'பூமியிற் பெரிது, கடலிற்பெரிது, மலையிற் பெரிது' எதுஎது என்று கேட்டு மறுநாள் விடைசொல்ல வேண்டுமென்ன, அச்சோழ சபையில் உத்தியோகத்திலேயிருந்த தந்தையார் வீட்டுக்குவந்து சிந்தனையிலாழ்ந்திருப்ப, மகனாகிய சேக்கிழார் அதுகண்டு, மிக எளிதில் அவற்றிற்கு விடையாகத் திருக்குறளிலிருந்து பின் வரும் மூன்று குறட்பாக்களையும் சொல்லித் தந்தையாரை வியக்கவைத்தார். அக்குறட்பாக்கள் முறையே :— ''காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும், ஞாலத்தின் மாணப் பெரிது''; ''பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கின், நன்மை கடலிற் பெரிது''; ''நிலையிற் றிரியா தடங்கியான் தோற்றம், மலையினும் மாணப் பெரிது'' என்பன. இதனால், சேக்கிழார் இளமையிலேயே

கல்வியில் மேம்பட்டு விளங்கினார் என்பது பெறப்பட்டது. இந்த வரலாற்றையொட்டிச் சபாபதி நாவலர் தமது சிதம்பர சபாநாத புராணத்திலே ''ஞாலமலை கடல் தன்னிற் பெரியதெது எனவெடுத்து ஞாலமாள் செங். கோலனந பாயன்வின வியமுத்தி றக்குறிப்பைக் குறிப்பி னோர்ந்து, சாலவுயர் திருக்குறண்மூன் றிறையாக வெழுதியவனரசு தாங்கி, வாலறிவாற் றிருத்தொண்டர் புகழ்விரித்த சேக்கிழார் மலர்த்தாள் போற்றி'' என்று துதித்துப் பாராட்டியிருத்தலையும் நோக்குக. காவலவன்—அநபாயசோழன். என - எது என என்றபடி. (44)

—திண்ணமதாய்

வையகமெங் குந்தேடி வந்ததமி ழோன் புகழச்
செய்யமுடி யைக்கொடுத்த செம்பொற்கை—

(கு - ரை.) முடி - தலை. இது, குன்றையூர் எல்லன் என்னும் பிரபுவின் தலையை ஒருபுலவன் கேட்கையில் அவருள்ளங்களிக்க மகிழ்ந்து தன்தலையை யறுத்துக் கொடுத்தார் என்பது கதை. இதனை ''எல்லன் என்னும் பிரபு அறநெறியன்றிப் பிறநெறி செல்லானாதலின், சொன்ன சொல்லை மறுத்துரையாமல் தனது தலையை யரிந்து கொடுத்தான் : இச்செயல் புறவின் பொருட்டுத் தனது உடற்றசையையரிந்து கொடுத்த சிபியின்செயலினும் சிரிதன்றோ'' எனப்புகழ்ந்தது தொண்டைமண்டலசதகம். மற்றும் அச்சதகமே ''......தலை கொடுத்தோனும்...... அனையோருளார் தொண்டைமண்டலமே'' என இவன் செயலைப் பாராட்டியுள்ளது. மற்றுமோர் பிள்ளைத் தமிழ் தாலப்பருவத்தில் ''தலையீந்தா வெனுமைந்தா தாலோ தாலேலோ, தரைகுன்றைப் பதியெல்லா தாலோ தாலேலோ'' என இச்செயல் பாராட்டப்பட்டுள்ளது. வையகமெங்குந் தேடிவந்த தமிழ்ப்புலவன் குன்றையூர் எல்லனை அண்டியதற்கும் ஓர் மேற்கோள் வெண்பா காட்டலாம் : அஃது பின் வருமாறு :— ''ஆலெங்கே யங்கே யரும்பறவை யாற்றுயிலும், மாலெங்கே யங்கே

மலர்மடந்தை—சோலைதொறும், செங்கேதகை மணக்குஞ் செங்குன்றையெல்லனெங்கே, அங்கே யிரவலரெல்லாம்'' என்பது. (45)

—துய்யபுகழ்

அட்டதிக்கு மெண்கீர்த்தி யாயிரத்தெட் டானைதனை
வெட்டிப் பரணிகொண்ட வீரக்கை—

(கு - ரை.) இது, வன்னியனாயினும் வேளாண்மையின் மிக்க கருணாகரத்தொண்டைமானைக் குறிப்பது. இவன் முதற்குலோத்துங்கன் படைத்தலைவனாய்க் கலிங்கத்துச் சென்று பலயானைகளை வெட்டிவீழ்த்தி மற்றும்பல யானைகளைச் சிறைப்பிடித்து வென்றியோடு வந்தமை யைக் கலிங்கத்துப் பரணி கொண்டறியலாம். பரணி கொண்டவன் குலோத்துங்கனாயினும் அவன் படைத்தலை வனுக்கும் ஏற்குமெனச் சொன்னபடி என்க ''ஆனை யாயிரம் அமரிடை வென்ற, மானவனுக்கு வகுப்பது பரணி'' யாதலின் 'ஆயிரத்தெட்டானை தனைவெட்டிப் பரணி கொண்ட' என்றது. 'துய்யபுகழ் அட்ட திக்கும் எண்கீர்த்தி' என்றது—இசையால் திசைபோயவன் என்ற படி. இவன் செயலினைத் தொண்டை மண்டல சதகமும், ''பண்டையொர் நாளையி லோரேழ் கலிங்கப்பரணி கொண்டு, செண்டையுமேருவிற் றீட்டுவித்தோன் கழற் செம்பியன் செய்தொண்டை நன்னாடு புரக்கின்ற கோனந்தித் தோன்றலெங்கள், வண்டையர் கோனங் கருணாகரன் தொண்டை மண்டலமே'' எனப் பாராட்டியது. (46)

—திட்டமுடன்

பொன்னா லமுதும் பொரிக்கறியுந் தான்கொணர்ந்து
நன்னா வலர்க்களித்த நாணயக்கை—

(கு - ரை)பொன்னால் - பெற்ற பொருளால். இது, வேளாளராகிய முனையடுவார் நாயனார் என்னும் சிவனடி யாரைக் குறிப்பது. முனையடுவார் போர்முனையெறிந்து தாம் பெற்ற பொருளினையெல்லாம் ஈசனடியார்க்கும்

நன்னாவலர்க்கும் வழங்குவதோடு, நெய், கறி, தயிர், பால், பழம் முதலியவற்றோடு திருவமுது அளிப்பார் என்பதை ''இன்ன வகையால் பெற்றநிதி யெல்லாம் ஈசனடியார்கள் சொன்ன சொன்ன படிநிரம்பக் கொடுத்துத் தூய போனகமுங், கன்னல் நறுநெய் கறிதயிர்பால் கனியுள் ளுறுத்த கலந்தளித்து, மன்னும் அன்பின் நெறிபிறழா வழித் தொண்டாற்றி வைகினார்'' என்ற பெரியபுராணச் செய்யுளால் தெளிக. இதனையே ஈண்டு 'அமுதும் பொரிக் கறியும்...அளித்த' என்றது. நன்னாவலர் என்றது ஈசனடியார்க்குமாகும். 'நள்ளார்முனையெறிந்த வளங் கொடிறைவரடியார்க்கு மாறாதளிக்கும் வாய்மையார்' ஆதலின் 'நாணயக்கை' என்றது. நாணயம்—நேர்மை. (47)

—முன்னாள்

மனக்கவலை யுற்ற வணிகன்முன் னேநின்று
தனைக்கா வெனக்கேட்ட தண்கை—

(கு - ரை.) கேட்ட - கேட்க, [அவனுக்கு] உதவிய தண்கை என்க. இது ஒருகால் ஆறைநகர்மேவு பரமேசுரன் புதல்வன் எல்லன் என்பானைக் குறிப்பதாகலாம். அவனைப் பற்றிய ஆறைக் கலம்பகத்தில், 'செட்டிதன்பழி தவிர்த்தவன் பரிவுசெய்து பெண் பழி தவிர்க்கிலான்' என வருதலின். விவரம் வந்துழிக் காண்க. இனி, 15, 16-ஆம் கண்ணிகளிற் கூறியதையே திரும்பக் கூறியதாகக் கொண்டாலும் இழுக்கின்று; என்னையெனில், அஃது அரும் பெருஞ் செயலென்று இம்மூலமாக வேளாளர் பெருமையை நன்கு விளக்குதற்கு என்க. இன்றும், பழையனூர்க்குச் செல்லும் வழியில் குழிமாண்டார்கோயிலையும் அதற்கு நேரெதிரே ஸ்ரீ சாக்ஷி பூதேஸ்வரர் கோயிலையும் தரிசிக்கலாம். 'தங்கக்கை' என்ற பாடம் உண்டு. அது, மேல்வரும் 'கனக்கவே' என்ற சீரோடு ஒன்ற வெண்டளை தட்டுதலின், 'தண்கை' என்ற பாடங்கொண்டாருமுளர். அதனையே இங்குக் கொண்டேன். இனி 'திண்கை' என்றும் இருக்கலாம். (48)

—கனக்கவே
அன்றீன்ற நாகெழுப தான்வெரு மைத்திறத்தைக்
கன்றோடு நல்குங் கடகக்கை—

(கு - ரை.) நாகு - எருமையிற் பெண். எழுபதான எருமை நாகு என மாறுக. திறம் - கூட்டம், மந்தை; herd. அன்றீன்ற கன்றோடு நல்கும் எனக்கூட்டுக. வேளாளர் தம்பாலுள்ள பசு மந்தைகளையும் எருமைகளையும் புலவர்க்குக் கொடுப்பரென்பதை ''நிரையீந் தெருமைப் போத்தளித்து......வாழ்வதன்றோ தொண்டை மண்டலமே'' என்ற சதகச்செய்யுளாலும் தெளிக. கடகம் - கங்கணம்; Bracelet, armlet: இனி, கைக்குக் கடகம், இயற்கையடைமொழியுமாம். கனக்கவே நல்கும் என இயையும். கனக்க - மிகுதியாக. (49)

—வென்றிதரும்
ஓரானை நூறா யிரக்கலநெல் லோர்கவிக்குச்
சீராக நல்குந் தியாகக்கை—

(கு-ரை.) ஒருகவிக்கு ஒருயானையையும் ஒருலக்ஷம் கலம் நெல்லையும் கொடுப்பர் என்றதால் யானையின் பராமரிப்புக்கேற்ற நிலபுலங்களையும் வழங்குவர் என்பது பெறப்படும். யானையைக் கொடுப்பதுண்டென்பதை ''உலைக்குரிய பண்ட முவந்திரக்கச் சென்றால், கொலைக்குரிய வேழங் கொடுத்தான்-மலைக்குரிய, வாணர்கோனாறை மகதேவன்'' என்று ஏகம்பவாணனைப்பற்றிக் கூறியவிடத்தானும் உணர்க, (50)

—பேரியலைச்
சாற்றுமொட்டக் கூத்தன் சரசகவி சொல்லப்பா
லாற்றுநீர் காற்கொணர்ந்த வாண்மைக்கை—

(கு-ரை.) இயல்-இயற்றமிழ்; அதாவது, இலக்கண மரபு பிறழாத செய்யுள் உரைநடை நூல்கள். கால்-வாய்க்கால்; Irrigation channel. சரசகவி-பரிகாசமான பாட்டு.

இந்தக் கவியாதெனை விளங்கவில்லை. ஒருகால் ஒட்டக்கூத்தன் வாய்க்கால்களால் சோணாட்டை வளம்படுத்தும் காவிரியைப் புகழ்ந்து, தொண்டைநாட்டிற் பாயும் பாலாற்றை அத்தகைய வாய்க்கால்க ளில்லாமைகண்டு சரசகவி மூலம் கேலி செய்திருக்கலாமோ எனத்தோன்றுகிறது. அங்ஙன் கூத்தன் சரசகவி சொல்லவே, வேளாளப் பெருமக்கள் பாலாற்றின் நீரைக் கால்வாய்கள் வெட்டி அவற்றின் மூலம் பாயச்செய்து தொண்டைநாட்டை வளம் பெறச் செய்த வீரமுடையவர் எனப்பெறவைத்தபடி. எனவே, பாலாறு வளஞ்சுரந்து நல்கமல்கும் பாளை விரி மணங்கமழ் பூஞ்சோலை தோறும், காலாறு கோலி யிசைபாட நீடு களிமயினின்றாடு மியற்றொண்டை நாடு'' என்று உமாபதி சிவாசாரியார் பிற்காலத்துப் போற்றும் படியாயிற்று வேளாளர் செய்த அருஞ்செயலால். (51)

—நேர்த்திபெற
வண்டமிழோன் றானுதைத்த வாகுளகா லுக்குப்பொன்
வெண்டயமிட் டேவணங்கும் வெற்றிக்கை—

(கு-ரை.) வாகு - அழகு: இங்கே இகழ்ச்சிக் குறிப்பினது. வெண்டயம் - காலணி, கட்டைவிரல் மோதிரம். இங்கே அறிய வேண்டிய விவரம்:—வல்லமென்னும் ஊரில் வாழ்ந்த கச்சியப்பன் என்னும் பிரபு பல்லக்கிலேறிப் போம் வழியிலே துடுக்கான வீரன் என்னுமொருபுலவன், தன்னைக்கண்டும் இறங்காமற் பல்லக்கிலேயே சென்றதற்காக அந்தப் பல்லக்கை யிறக்கச் செய்து உள்ளேயிருந்த பிரபுவை வில்லைச் செருப்பையணிந்த தன்காலினால் உதைத்தான்; அப்பிரபு சிறிதும் கோபிக்காமலும் வெறுக்காமலும் பொறுத்து அப்புலவனுக்குப் பணிவுடன் உபசாரஞ்செய்து ஒரு பல்லக்குங்கொடுக்க, அப்புலவன் அப்பிரபுவை மிகப்புகழ்ந்து ''பல்லக்கிலேயன்றி மண்படுமோ'' என்னும் பாடலைப் பாடினான். அப்பிரபுவாகிய கச்சியப்பனும் தொண்டை மண்டலத்து வேளாண் பெருமகனாவன். ''மண்படுமோ வெய்யிலிலே வாடுமோ புல்லரிரு, கண்படுமோ வன்பாகக் கற்றவர்கள்—மண்புகழ, மெச்சியப்பாலும்புகழும் வீறு

வல்லை யாளவந்த, கச்சியப்ப னையுதைத்த கால்'' என்ற வெண்பா அவர் பெருமை குறிக்கும். ஈண்டு, ''வில்லைச் செருப்பிட்ட காலாலுதைத்து வியனுலகில், சொல்லற்கரிய புகழ்கொடுத்தோன் றுட்ட வீரன்றன்னாற், பல்லக்கிலே யன்றி மண்படுமோ வெனும்பாடல் கொண்ட, வல்லப் பதிக் கச்சியப்பனும் வாழ் தொண்டை மண்டலமே'' என்ற சதகப்பாடலையும், ''உதை கொடுக்க மார்கொடுத் தோனும் அனையோருளார் தொண்டை மண்டலமே'' என்ற வரியையும் நோக்குக. ''பொன் வெண்டய மிட்டே வணங்கும்' என்றது-அவன் புலவனுக்குப் பொதுவாகச் சிறப்புச்செய்தபடி குறிப்பது என்க. (52)

—புண்டரிகக்

கையாற் புலவன் கனகமுடி மேற்குட்டச்
செய்யாழி பண்ணியிட்ட தீரக்கை—

(கு-ரை) புண்டரிகம்-தாமரை, செய் ஆழி-செவ்விய மோதிரம். கனகமுடி-சிறந்த தலை என்றபடி. குட்டின கைக்கு மோதிரம் இட்ட தீரர் வேளாண்மரபினர் என்றபடி. விவரம் வந்துழிக் காண்க. (53)

—நொய்ய

எறும்புக்கு மாஸ்பதந்தா னில்லையென்ற மட்டிற்
றிறம்புக்க யானைதருஞ் செங்கை—

(கு-ரை.) நொய்ய-அற்பமான. ஆஸ்பதம்-ஆதாரம் (Support); இது வடசொல்; இதனை 'ஆற்பதம்' எனத் திருத்திக் கொண்டாருமுளர்: அருணகிரியார் திருப்புகழில் ''சரணாஸ்பதமருள்வாய்'' [என அப்படியே அமைத்திருத் தல் நோக்கத்தக்கது. இங்குக்குறிப்பது-எறும்புக்கு உணவிடு மாறு கூட ஒரு அரிசியேனும் என்னிடம் இல்லை என்று புலவன் கூறியவுடனே மந்தையிற் புகுந்திருந்த [மந்தையாக விருந்த] யானையைத்தருகின்ற வண்கையினர் வேளாளர் என்றபடி. இஃது, சிறிது கேட்பப் பெரிது ஈயும் அவர் வள்ளன்மை குறிக்கும். ''சேற்றுக் கமலவயற் றென்னாறை வாணனையான், சோற்றுக் கரிசிதரச் சொன்னக்கால்—

வேற்றுக். களிக்குமா வைத்தந்தான் கற்றவர்க்குச் செம் பொன், அளிக்குமாறெவ்வா றிவன்'' என்னும் ஏகம்ப வாணனைப்பற்றிய பாடலை நினைக. ஆய் அண்டிரனாகிய வேளாள வள்ளலைக் குறிப்பதாகவும் கொள்ளலாம். திறம்-மந்தை.

—பறம்புதனில்

எண்ணா யிரமுனிவர்க் கேற்றபடி யப்படியே
பண்ணாக் கொடுக்கும் பராக்ரமக்கை—

(கு-ரை.) 'பறம்பு' என்றதால் வேள் பாரியைக் குறிப்ப தாக்கொள்க, [வேள் என்பது வேளாளர்பெற்ற சிறப்புரி மைப் பெயர்]. முந்நூறு ஊரையுடைய பறம்புநாட்டைப் பரிசிலர்க்கு ஈந்தனன் என்பதைப் புறநானூறு செய்யுள் (110) கொண்டு தெளியலாம். அஃதேபோல் தன்னை யண்டிய பல அந்தணர்களுக்கு அவர்கள் பெருமைக் கேற்றபடி அவர்கள் விரும்பிய அளவுப்படியே தகுதி யாகப் பொருள்களைக் கொடுத்த வீரக்கையினன் பாரி என்றபடி என்க: முனிவர்-அந்தணர்: கபிலர் என்ற புலனழுக்கற்ற அந்தணாளரும் பாரிபால் நட்புரிமை பூண்டிருந்தமை யோர்க. எண்ணாயிரம் என்றது மிகுதி குறிக்கவந்த ஒருபேரெண். அப்படி-[அவர்விரும்பிய] அவ் வளவே: படி-அளவு. பண்ணா-தகுதியாக, வரிசையறிந்து என்றபடி: பண்-தகுதி. பராக்ரமம்-வீரம்: ''கடந்தடு தானை மூவிருங்கூடி, உடன்றனி ராயினும் பறம்பு கொளற் கரிதே'' என்ற கபிலர் வாக்குக்கொண்டு பாரி யினது வீரம் ஓர்க. (55)

—விண்ணாடர்

கூர்த்த புகழண்ட கோளமள வும்படர
நாற்றிக்கு மேருவினி னாட்டுங்கை—

(கு-ரை) நாற்றிக்கும் அண்டகோளமளவும்விண்ணாடர் கூர்த்தபுகழ் படர மேருவினில் நாட்டுங்கை எனக்கூட்டுக. எல்லாத்திக்கிலும் வானத்திலும் தேவர்புகழ் பரவுமாறு இவ்வுலகத்து மேருவில் புகழ்க்கொடி நாட்டியவர் வேளா

ளர் என்றபடி. நிலவுலகத்தாரை உணவு உண்ணச்செய்த லோடு, அந்நிலவுலகத்தார் செய்யும்யாகங்களிற் கொடுக்கப் படும் அவிர்ப்பாக மூலமாகத் தேவர்களையும் திருப்தி செய்து பாதுகாத்தலால், அத்தேவர்கள் புகழையும் குன்றாது நாட்டிப் படரச் செய்பவர் வேளாளர் என்பது தேர்ந்த கருத்து. மேருவில் [கொடி] நாட்டுதல் என்பது எல்லாருங்காணப் பரப்புற்கு ஓர் வழக்கு. விண்ணாடர்—தேவர். கூர்த்த—'கூர்' என்ற உரிச் சொல்லினடியாப் பிறந்த பெயரெச்சம். 'நாற்றிசைக்கு' என்ற பாடம் சில பதிப்பிற் காண்கின்றது. (56)

—சீர்க்குகனை
ஆதார மானவனை யைங்கரனைச் சங்கரனைப்
பாதார விந்தம் பணியுங்கை—

(கு-ரை.) குகனை-குகனுக்கும், ஐங்கரனை-கணபதிக்கும், ஆதாரமானவனை - தோற்றக்காரணமாயிருந்த சிவபிரானை எனப் பொருள் செய்க. அஞ்ஞான்று, மேல், 'சங்கரனை' என்பதோடு இயைந்து பொருள் சிறக்கும். இனி, மூவரையும் பணியுங்கை எனினுமாம். பாத அரவிந்தம்-திருவடித்தாமரைகள். இது, வேளாளரின் சைவப்பற்றுக் குறித்தது. (57)

—நீதி
நடக்கை யிருக்கை நகைக்கை மிடிதீர்க்கை
கொடுக்கை செழுங்கை குளிர்க்கை—

(கு-ரை.) நீதிநடத்துதல், நீதிதங்குதல், நீதி விளங்குதல், மிடிதீர்த்தல், ஈதல், இவற்றால் செழித்த கை எனப் பொருள் காண்க. 'நீதி' என்ற சொல் மேனின்ற 'கை' விகுதி பெற்ற மூன்று தொழிற்பெயர்களோடும் இயைந்தது. நகைக்கை-ஒளிர்தல். நகை-ஒளி. ''நகைதாழ்பு துயல் வருஉம்'' (திருமுருகு: 86). மிடி-வறுமை: ''மண்ணவர் வறுமைநோய்க்கு மருந்தன சடையன்'' என்ற கம்பன் வாக்கும் நினைக. தீர்க்கை, கொடுக்கை-இரண்டும் 'கை' விகுதிபெற்ற தொழிற்பெயர்களே. நீதிநடக்கை யிருக்கை

நகைக்கை-இதனை முன்னர்வந்த 15,16,17 கண்ணிகளால் தெளியலாம். மிடிதீர்க்கை கொடுக்கை என்பவற்றைப் பின்வரு மாற்றான் தெளியலாம்:—இரவலர்க்கு உணவு பசும்பொன் மணி அணி, ஆடை கொடுத்து, பின்னும் லச்சையுடையவராய்த் தமக்கு வேண்டியவற்றை வாய் திறந்து கேட்கக் கூசுவோரு மிருப்பரென்றெண்ணி, அவர் மனத்தில் கருதியவற்றை எழுதும்படி செய்ய முற்றத்தில் மணலைப் பரப்பிவைத்து அவ்விரவலர் எழுதுமட்டும் வீட்டினுள் மறைந்திருந்து பின்வெளிவந்து பார்த்து அவர்கள் எழுதினபடியே கொடுக்குங் கொடையாளனாகிய மாகறல் ஊரினனாகிய புண்யகோடி யென்னும் வேளாண் பிரபுவின் வரலாற்றால் அறியலாம். மற்றும், பஞ்சம் வந்த காலத்து அப்பஞ்சம் நீங்குமளவும் நாலூரிலிருந்த புலவர்களுக்கும் வேறு தேசத்திலிருந்து வந்த நாவலர்க்கும் அவர் விரும்பியபடியே அன்னம் முதலியன இட்டு ஆதரித்து, நாடு செழித்த பின் அவர்களுக்குத் தக்க பரிசளித்தனுப்பிய குமிழம்பட்டு ஊரினராகிய வேளாண்பிரபுவின் வரலாற்றாலும் அறியலாம். "உணலைப்பசும்பொன் முதலானவற்றை யுதவிப்பின்னும், குணலச்சை யுள்ளவர் கேட்கவுங் கூசுவர் கொல்லெனவே, எணலைக் கருதியெழுதிவைப்பீரெனவின்மறைந்து, மணலைப் பரப்பிய முன்றிலுளான் தொண்டை மண்டலமே;" "கோலூருழவுக்குடியானவன்றன் குமிழம்பட்டு, வேலூர்க்கிழானொரு வேளாளன் பஞ்சம் விடியளவும், நாலூரிலுள்ள புலவோர்க்குந் தேசத்து நாவலர்க்கு, மாலூரிலன்னங் கொடுத்தளித்தான் தொண்டைமண்டலமே" என்பது சதகம். செழும் கை-மேற்குறித்த ஐந்தொழில்களாலும் வளமுற்ற கை. எனவே, குளிர்க்கையாயிற்று. குளிர்க்கை-இனியதாகுங்கை. குளிர்தல்-கண் முதலிய பொறிகளுக்கு இனியதாதல். (58)

—தொடுத்ததெல்லாஞ்
சீராக வுண்டாக்குஞ் செங்கைப் பெருங்கருணைக்
காராளர் கற்பகப்பூங் கை.

(கு-ரை.) தொடுத்தது-புலவர் வளைத்துக் கேட்டது. தொடுத்தல்-வளைத்தல். ''தொடுத்துங் கொள்ளா தமைய லென்'' என்ற புறம் காண்க. (செ: 164) தொடுத்த தெல்லாம்-ஒருமைப்பன்மை மயக்கம். தொடுத்ததெல்லாம் சீராகவுண்டாக்குஞ் செங்கை என்பதற்கு ஓர் எடுத்துக் காட்டு:—வல்லாளன் என்னுமொரு வேளாண் பிரபு அரசன் அழைக்க அவன் சபைக்கு விரைந்து வந்துகொண் டிருக்கும்போது இடைவழியிலே ஓர் புலவன் தடுத்துத் தனக்கு உடுக்க உடையில்லை யென்றிரக்க, அதுகேட்டு அவனை மனைக்கு வரும்படி சொல்ல மனமில்லாது, உடனே தான் உடுத்தியிருந்த ஆடைகளைக் களைந்து கொடுத்துவிட்டு, அருகிலிருந்த குளத்தினீரிலிறங்கித் தங்கி யிருந்து, கரையிற்போவாரை யழைத்து ஆடைகொணர் வித்து உடுத்திக்கொண்டு அரசவைக்குச் சென்று புகழ் பெற்றார். இதனை ''உளத்துத் தயையற்றவோர் புலவோனுக்குடையுதவிக், குளத்துப்புனலை யுடுத்துநின்றே பின்பு கூவியவைக், களத்துப்புகுதக் கலையுடுத்தேகரை யேறிவந்த, வளத்துப் புகழ்பெற்ற வல்லாளனுந் தொண்டைமண்டலமே'' என்ற சதகச் செய்யுளாலறிக. இவ்வாறு, மேல் 58 கண்ணிகளிலுங் குறித்துள்ள பெருமை களைக் கொண்டிலங்குங் கை யாதெனில்: ''பெருங் கருணைக்காராளர் கற்பகப்பூங்கை'' என வினைமுடிபு செய்க. காராளர்-வேளாளர். இவர் கையின் சிறப்பினை, ''மேழி பிடிக்குங்கை வேல்வேந்தர் நோக்குங்கை, ஆழி தரித்தேயருளுங்கை—சூழ்வினையை, நீக்குங்கை என்று நிலைக்குங்கை நீடுழி, காக்குங்கை காராளர்கை'' என்று கம்பர் பிறிதொருசமயம் வயலிலுழும் வேளாளனிட்ட கூழுண்டு பாடியதாலும் உணர்க. (59)

திருக்கை வழக்கம் முற்றிற்று

———

## ஏர் எழுபதும் திருக்கை வழக்கமும்

## Ear Elupathu and Thirukkai Vazhakkam

It has become necessary to authenticate the root cause of the birth of this wonderful work of Kambar.

There exists a doubt as to who is the author of this great master-piece of Tamil literature even after 800 years of production of AER Elupathu.

I reproduce here an excerpt from the Book of "Many Authors" Pages 43—45 to confirm the authenticity of the Authorship of Kambar.

*ஏரி னுழாஅர் உழவர் புயலென்னும்*
*வாரி வளங்குன்றிக் கால்—குறள்*

"The fruitful toils of men and steers must cease,
If cease the flow of water from the clouds."

"The fruitful toils of men and steers"—The Tamil nation may be considered as cheifly agricultural, originally, perhaps, wholly so, for though various manufactures existed in the provinces to which the dominion of the ancient Tamil Princes extended, the several castes by which these were conducted were by the ancient institutions of the country, in absolute subjection to the cultivating tribes; the Cani-yatchi-carer (*காணி ஆட்சிக்காரர்*) or Lords of the soil, who, however, derived their superiority, not from fictitious incidents, but from (uzhavad'ei) the rights of the plough. Intercourse with foreign nations,

the extension of commerce and other circumstances have in latter times materially altered the manners of the olden time and infringed the privileges of the landed proprietors, but, they have not been able to prevent a lively tradition of them remaining, and this has given origin to the dissentions between the factions denominated Valang-caiyur and Idung-caiyur,(வலங்கையர் இடங்கையர்) or, as commonly though improperly called, the right and left-hand castes; the former including the whole of the agricultural tribes, who endeavour, under a different order of things, to maintain their ancient pre-eminence; the latter, including chiefly the trading and manufacuring tribes, who endeavour, and in modern days generally with success, to evade it.

The veneration in which the Tamil people formerly held the plough was unbounded. The numerous remains of ancient art, existing in all parts of the country, consist, almost exclusively, in buildings intended for religious and charitable purposes and those reservoirs, channels, and embankments, which by restraining and distributing the waters of the periodical rains,render the soil fit for laboors of the husbandman. Many of these are stupendous works and must have been erected when a great portion of the wealth of the country was systematically applied to the agricultural improvement of the country when in fact the cultivators of the soil were, as tradition states them to have been, the nobles of the land and their occupation alike the source of wealth and honour. Kamben the translator of the Ramayanam, which he undertook under the patronage of the wealthy farmer

Ven 'nei-nellur Sadeiyan, whom he has celebrated in it, has left a poem called—ஏரெழுபது the seventy stanzas in praise of the plough, from which the following extracts are taken. The first of these verses commences with a couplet borrowed from the Cural (see the 3rd, verse of the 104 Chapter entitled உழவு on agriculture in the second Part—பொருட்பால் On wealth)

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம்
தொழுதுண்டுபின் செல்பவரன்றே சொல்லுவதில்
எழுதுண்ட மறையன்றோ இவருடனே யிகலமுது
பழுதுண்டோ கடல் சூழ்ந்த பாரதத்தில்
பிறந்தோரே.

"THOSE TRULY LIVE, WHO LIVE BY THE PLOUGH; ALL OTHERS DO NOT LIVE, AS THEY ARE IN SERVITUDE AND DEPEND UPON THOSE THEY SERVE,"—is it not so? is it not thus that in the ancient world the precept was written? is it not wrong, therefore, to compare with these any that are born in the sea-surrounded earth? In continuing the 15th verse., Kambar :—

"மழை பெய்யினும், பெய்யாதாயினும், மக்களுக்கு
வளமேர் படுவது எவராலே அந்தணரது யாகம்
நலம் பெறுவது யானைகள் மதம் அடைதல் எல்லாம்
உழவெருக்கான் வலிமையால் தான்.

By these when rain pours from the heavens abundance is produced; by these, also, is produced the benefit of the science of those by whom the precepts of wisdom are taught; and by the strength of their oxen is supported the strength of the furious, elephant, bearing death through the field, when princes lead their armies forth to battle.

The laws of Manu. cherished by the lords of the four Vedas; the felicity of victorious princes, who protect the world by their arms; these are matured by the plough-handle of the cultivators of the earth, whose word will never change even though fate should change."

Excerpts From The Book "Many Authors" (p. 43-45)

# Seventy Poems on the Plough

## Preface

There are Nine stanzas as preface singing the praises of the Gods and invoking their blessings on the author to perform his work with divinity.

### 1. GANAPATHY

He is the God who supposedly helps to carry out a piece of work without interruption.

To sing the praises of the seventy Implements used by the farmers who are called the sons of Ganga—The river Goddess, we invoke the blessings of Lord Ganapathy, Ganapathy the Great Elephant God who in turn worships the Lord Siva—the adored husband of Uma—the daughter of the mountains.

### 2. THE TRIUNE GODS

For the Perpetration of the moral principles upheld by the sages, for the maintenance of the principles of Human rights and charity, for the prosperity of the farmers, we invoke the blessings of the three gods, namely Brahma—The Lord of the four Vedas; Vishnu or Thirumal of the Thulasi garland; Siva, who wears the crescent moon in his flowing hair.

## 3. GODDESS OF SPEECH

We shall adore the Goddess of Speech who dwells on the tongue of Brahma, who created the world and invoke her blessings for three rains every month; for prosperity of lives; for the abundance in the fields of Velalars; for the welfare of the tribe of devotees; for the spread of the Code of Manu.

## 4. EXCELLENCE OF THE CHOLA REGION

Chola region is the one before which all the kings, beginning with the King of Elam, who wields mighty weapons, bow down: it is the region where the decendants of Cempiyan were born and live prosperously; It is also the region by the banks of the boundless Cauvery where gold and gems abound.

## 5. EXCELLENCE OF THE CHOLA KINGS

Of the three great Kings, Chola, Chera, Pandian bearing the Crowns and banners, the greatest is the Chola king—Cenni, who rules the Seventy nine Provinces surrounded by resounding Seas. There is none else as mighty.

## 6. EXCELLENCE OF THE GREAT CHOLA COUNTRY

The Court of the great country of king Cholan whose arms are as strong as the mount Mantaram, who wears the Crown of rubies, and also wears the Crowns of both Ceran and Sundara Pandian is like the Court of God Indra who sustained the sages and upheld all their virtues,

## 7. EXCELLENCE OF THE TRIBE OF VELALAR

Vishnu the God who bears the discus as his weapon, lies on the Seas. Lord Shiva dances at Thiruchitambalam. Lord Brahma Protects the Clans of the world. But the praises of Velalars,the Gods of the Plough, are incomparable to those of any other gods.

## 8. EXCELLENCE OF THE VELALARS

What if one were born a Brahmin; or among the bright Crowned kings; or among the prosperous Merchants that come after (in the heirarchy); or what if one acquired distinctions; Only those born among the farmers are born to sustain the world.

## 9. EXCELLENCE OF GRACE

When the Lord Brahma, seated on the red lotus himself, could create these Velalars (As the Sustainers of the world) even before He created the rest of the world, who am I that I should think them too low for my praises? These who tend the world with abundant Love like that of a mother overwhelmed, with kindness, feeding a crying child.

## 1. EXCELLENCE OF THE CLAN OF AGRICULTURISTS

Pray, tell if there be any clan that will match the caste of the, mother—like, faultless farmers. The high cast of Brahmins? The great caste of Victorious Kings? The caste of moneyed merchants who have acquired wealth by just means ?

## 2. COMMENCING PLOUGHING ON AN AUSPICIOUS DAY

If the farmers commence their ploughing on an auspicious day with the singing of Aer Mangalam (ஏர் மங்கலம்) of the appropriate season, propserity will be showered upon this world girded by the Southern Seas. The rains will fall and all lives will prosper.

## 3. EXCELLENCE OF AGRICULTURE

Unless these "Noble men" celebrate their "Festival of the Plough" where the people enjoy the water Sports in the rivers and fill the world with prosperity, the great kings with their armies of elephants, chariots, horses and infantry will not be able to excell in and enjoy their festivals of war.

## 4. EXCELLENCE OF THE PLOUGH

All the might of the great kings Sheltered under the royal Parasol and commandeering the four armies—Killer elephants, Chariots, Cavalry and infantry, cannot prevail

against their enemies without the mighty weapon—The Plough of the Country farmer—who lives in the land made fertile by the Ponni river abounding with Vaalai (வாளை மீன்) fish.

## 5. EXCELLENCE OF THE PLOUGH HANDLE (MERLI)

Hail, the sacrifices offered by the priests of the four Vedas, the great wealth of the Strong Kings who mete justice by virtue of their Sceptre are possible by means of nothing other than the plough-handle of the 'Nobleman' whose fame is bound to last even as aeons pass by.

## 6. EXCELLENCE OF THE PLOUGH—PEG

This ancient world does not stay in existence because of the Lord Siva, who wears the sacred ashes, neither because of Brahma seated on his lotus flower, nor because of the tall Lord Vishnu. If the Plough that tills the fertile landwatered by the unfailing Cauvery river has its plough peg (made of wood—holding the Plough together) intact, This world will not fall apart.

## 7. EXCELLENCE OF THE YOKE

The Yoke of the bright large chariot of the glorious red sun dispels the earthly darkness of this earth surrounded by the Seas. But the Yoke of the Plough of the 'Karalar' redeems, the inhabitants of this earth from impoverishment, Satiates their hunger brightening and dispelling the darkness of deep depression.

## 8. EXCELLENCE OF THE HOLE IN THE YOKE

The hole bored in the ears of the people of this world surrounded by Seas of hurtling waves, bears but ornaments of Gold; But it will never be as helpful as the one in the Plough of the farmers who live in the great country watered by the full and fertile River ponni.

## 9. EXCELLENCE OF THE PEG OF THE YOKE

Even the great axle of the Chariots of the Sun—The great sustainer of the world is no match to the wooden Peg-axle-of the Yoke which ploughs the fertile land watered by the great Cauveri river.

## 10. EXCELLENCE OF THE ROPE (CHORD) THAT FASTENS THE BULLOCK TO THE YOKE

The two ropes with which the astrologers determine the agreement or decide auspicious days are no ropes at all. Only those two ropes that fasten the bullocks to the auspicious Plough of the noblemen of great fame of this Sea-GIRT world are significant as the marriage chain of the daughter of the earth.

## 11. EXCELLENCE OF THE JOINT ROPE

(The rope which connects the Plough and the draft pole is the joint rope.) It is not by the tall Mountains which cleave the clouds above and go down into the waters below, nor by the hills abounding on the eight directions and limit the world, that this earth is strengthened and held firm. But by this joint rope which holds the plough

and the bullocks all together. If this rope is held firm the world will be held firm and will not falter in its morality and justice.

## 12. EXCELLENCE OF THE PLOUGH SHARE

Those who profess all the arts that are based on the scriptures wait upon at the portals of the Ploughmen. The Prosperity during the reign of chieftians and kings who wear garlands is also of the wealth which is produced by the plough Shares. So who shall declare the greatness of these?

## 13. EXCELLENCE OF THE PEG OF THE PLOUGH SHARE

Even if the abundant rains showered every month and the sub water level rose in the fertile earth the world will be devoid of riches but for the peg of the plough Share of those whose country is watered by the unfailing Cauvery.

## 14. EXCELLENCE OF THE OX—GOAD

The Stick in the hand of the farmer which prods the OX is symbolic of the sceptre of the King. The Crown's of the rulers of this world is honoured when green seedlings sprout in the productive fields of the farmers who are not beset by the pangs of hunger. Thus it is his sceptre of the goad which keeps justice and order by keeping away hunger—the cause of all mis-conduct.

## 15. EXCELLENCE OF THE PLOUGH OXEN

Even if the rains fall in plenty from the skies, it has to be used up by the crops to be matured as fruitful grains. The sacrifices offered by sages give fruits because of the farmers. The warring elephants fight with great strength to the end, So that the country may become prosperous. All these are of avail only because of the strength of the twin oxen which pull the plough.

## 16. EXCELLENCE OF THE SCAR ON THE NAPE OF THE OX

They say that the scar on the Sacred throat of the God with an eye on his forehead helped feed the celestials with ambrosia But the Scar that feeds people with rice and protects the other world, is the one found on the nape of the Ox of the infinitely great noblemen.

## 17. EXCELLENCE OF YOKING THE OXEN

It is the farmers who feed the world. The fame of any but those who yoke the oxen to the plough is noe reckoned as fame. Even the great kings who erect pillars of Victory after their great wars cannot be compared to these farmers.

## 18. EXCELLENCE OF HITCHING THE YOKE TO THE PLOUGH

Unless those of the fertile country watered by Cauvery—benevolent even as the clouds—Hitch their Yoke to the Plough, the sun also will not hitch his cha-

riot; The elephants guarding the eight quarters also will not bear (the weight of this world) and cupid too, will not fix the arrow to his bow.

## 19. EXCELLENCE OF PLOUGHING

This Stanza is as the jewel in the Crown of praise of the farmers.

If the Ploughmen guided by the rains, continued to plough and flourish, the culture of that country embodied in its arts—poetry, music, dance will also prosper and flourish. Goodness will prevail and abundant blessings will abound. The works of justice and virtue will abound; this great world will continue to exist, the great armies will continue to protect the kingdoms and only hunger (The Scourge) will not be.

## 20 EXCELLENCE OF PLOUGHMEN

No one born in this world surrounded by the seas will consider it wrong if one agrees with the ancient scriptures which state clearly that only those who live by ploughing—the ploughmen—live. All others, in obeissance serve these (farmers)

## 21. EXCELLENCE OF PLOUGH

It is the plough in the hands of the Ploughmen which makes the scriptures meaningfull; The sacrifice of priests to be fruitful; the Arts flourish; the poetry of bards to be understood; the flower goddess of prosperity to shower

blessings; the rains to fall in due seasons and (manu) justice prevails and thus enlightens the world.

## 22. EXCELLENCE OF THE FURROW

If it be true that the great sacrifices of blameless ancient priests depends on the plough—it is fit to say that the world knows no other path other than the furrow made by the plough of these great farmers, to redeem tself.

## 23. EXCELLENCE OF THE SPADE

While the spade remains in the hands of the farmers, want there never will be; in the forefront to help them will be the goddess of wealth who wears the honeyed garland; the joyous goddess of earth and the goddess of victory; want will disappear from this ancient world.

## 24. EXCELLENCE OF RIDGINGS

In this world where the body is given importance the boundaries of conduct presented by the vedas and traditions, are meaningless. Unless the pure and simple sons of Goddess earth whose mercy is everlasting—the ploughmen—tend the boundaries of their farms and keep the ridges intact, the corners of the world will not find its true moral boundaries.

## 25. EXCELLENCE OF THE BASKET OF MANURE

Unless those (the farmers) who in rows fill their big baskets with the right amount of manure, carry them on

their heads, bend down and transfer these baskets to the others and thus adore the Goddess of the Earth, they will not be able to absolve the sins of the lazy and slothful humans.

## 26. EXCELLENCE OF CHURNING THE MUD

The honest Velalars shun falsehood; with all their heart they condemn misery. They strive to destroy the weeds in their Fields and for the sake of Productivity alone they churn and muddy the soil.

## 27. EXCELLENCE OF LEVELLING THE LAND

The ridges are made as for the flowering fields. The bunds are raised to increase the level of water and increase the yield. As the farmers of the great country watered by the river Ponni, level the paddy fields with their levelling planks, the clods break and become mud, the texture of the soil improves and enriches the soil.

## 28. EXCELLENCE OF SPROUTING SEEDS

Even to those who worship God in the hope of attaining divine Love (Bakthi), and even to those wise sages hoping to attain salvation, and to those who generously give rich-food to attain their wishes, nothing will germinate (begin to be fruitful) unless the farmers who are the gifted agents of productivity, start the process of germinating their seed paddy.

## 29. EXCELLENCE OF THE SHOOTS

If the shoots appear uniformly in their fields and yield abundantly, taxes will be paid; grace will prevail; the valiant kings of great deeds will be steadfast; merchants will not transgress; priests will not misinterpret the scrip tures; Never will Manu swerve from virtue; Never will justice fail in the world.

## 30. EXCELLENCE OF THE SEEDLINGS

Though the clouds of the skies which thunder as the bulls in the fields, come down in torrents to help humanity without selfishness; though the rivers which they flood only serve to swell the seas which they reach; and though there are many factors which help growth of this world; the lives of all beings in this world will never brighten unless the Velalars grow the seedings in their productive fields.

## 31. EXCELLENCE OF THE UPROOTING OF SEEDLINGS

Even if the planetary positions change in the heavens- as Saturn entering the Zodiac of Pisces, or Venus moving southwards, it does not benefit mankind; unless the far- mers, by the never failing river Cauvery, uproot the seedlings on the appointed auspicious day to transplant them in their fertile, manured field. Then and then anly will the world not hunger.

## 32. EXCELLENCE OF CARRYING THE BUNDLE OF SEEDINGS

The crown of Kings made of gold and studded with rubies and precious gems is no crown at all., unless the noble men carry their crown of pretty green seedlings tenderly on their heads, the righteous rule of the Kings will never spread to distant lands.

## 33. EXCELLENCE OF GATHERING BUNDLES OF SEEDLINGS

It is only because the crown of the bundle of seedlings are gathered in the fields, that the various crowns of the Kings Pandiyan, Cheran, The king of the land of Ponni river and all the crowns of the various Kings of this earth prevail.

## 34. EXCELLENCE OF BROADCASTING THE SEEDLINGS

If the Farmers who destroy the Fiery and Mighty miseries of hunger, do not broadcast their seedlings, there is nothing else that should be so done ! If this is not done the faultless Priests will not recite their scriptures, the Kings will not dispense justice, Bards who dispel the doubts of humans will not compose their priceless Tamil Texts.

## 35. EXCELLENCE OF DEXTERITY

It is not by learning the scriptures to understand the qualities of God nor by learning the Epics full of False praises, that one is learned or useful; It is only by learning the dexterity with which the seedlings are transplanted in the fields so as to benefit the whole of humanity is one truly learned.

## 36. EXCELLENCE OF THE TRANSPLANTLNG FRONT

Even the War front where the great Kings overthrow their enemies cannot be compared to this transplanting front where (to overthrow the enemy of poverty) the Kings of the soil, some plough and some plant—fight their, Godly war.

## 37. EXCELLENCE OF GROWING CROPS

Seasonal Rains nor the great Cauvery river will not assuage hunger. It is the process of making seedlings grow by the process of ploughing, creating the muddy soil, fertilizing it with good manure, keeping it wet by constant watering, which—done by the Velalars can satisfy the hunger of this world.

## 38. EXCELLENCE OF THE STUMP OF THE CROP

The Capital of the priests are the scriptures; to the kings—Victory; To the merchants—Their wealth. But it is this crop of life giving Food raised by the godly plough-

men—the bedrock of (Tamil Culture) which is of Prime importance as the elixer of life to all life, that has been ever created.

## 39. EXCELLENCE OF RAISING CROPS

As the crops of the Karalars grow, goodness will grow; the rule of valiant Kings will grow; Fame will grow; the riches of Merchants will grow; beauty will grow; wealth will grow; Food will grow and the Sea-Girt World will grow.

## 40. EXCELLENCE OF THE PICOTTAH

Even if clouds by the wind are dispersed; even if Venus went southwards, drying up the seas and the river waters, it is the duty of the Karalars to bale out water by, Picottah every day and thereby produce bounteous crops in this world and protect the lives of humans.

## 41. EXCELLENCE OF THE WATER IN THE BUCKET OF PICOTTAH

It is only by the water baled out by the well sweep of the Velalars rooted to their soil that the monarchs of arts and scriptures perform sacrifice; That the kinge with mountainous shoulders wear jewelled crowns and the merchants make money.

## 42. EXCELLENCE OF CULTIVATING WASTE LANDS

Unless the protectors of the virtues of the world—the Karalars—Clear the Forests of Wasteland, level the hillocks, make the ridges, and prepare the soil for cultivation; The kings who try to bring about equality among the subjects, clear away evil and destroy the forests of poverty in their kingdoms will not succeed.

## 43. EXCELLENCE OF DRY EARTH

(In an alternate manner of cultivation the earth is prepared for sowing the seeds in a dry manner. The soil is ploughed over and over again and made as dust in preparation for sowing.)

Even as the dry earth prepared by the farmer yields immeasurable goodness, the most difficult of scriptures will be understood by the sages; Music, dance and dramatics of highest order prevail; The purest of charity abound and the rule of the sovereigns be praiseworthy.

## 44. THE EXCELLENCE OF THE TENDER CROPS

The farmer who while bearing the burdens of even evil men do not themselves become evil. They scare who never see anyone as not of their own; as they plant the tender crops and tend them, plant gentle—goodness, in the whole earth.

